கவிக்குயில் நிலேயச் சுடர் 2

# கவிக்குயில் நிலேயக் கதைத் தொகுதி










கவிக் குயில் நிலேயம்,
கோட்டாறு.

# பதிப்புரை



இக்கதைத் தொகுதி கவிக்குயில் நிலையத்தின் (முந்திய பெயர் - தேவி நிலையம்) இரண்டாவது வெளியீடாகும். இதில் தமிழ் மறுமலர்ச்சி எழுத்தாளர்களில் சிறந்த சிலர் தமது உணர்ச்சிப் பெருக்கைச் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார்கள். தமிழகம் இதை ஆதரித்துப் போற்றுமாக! இவ்வெளியீட்டிற்குப் பலவிதத்தும் உதவி நல்கிய பெரியார்கட்கு எங்கள் இதய நன்றி.

கவிக்குயில் நிலயத்தார்.

## உள்ளுறை



### நன்றியுரை


*இக்கதைகளில் சில பத்திரிகைகளில் வெளிவந்தவை. முதல் முதல் வெளியிட்டாதரித்த அவ்வாசிரியர்கட்கு எங்கள் இதய நன்றி.*

பொதுஜனங்கள் மிகவும் வருந்துகிறோம். எங்களைக் கருணையில்லாமல் வலிய வரிகள் போட்டு ...க்கக்கூடாது. ஏன் என்றால் ...லோகந்தான் கதியாயிருக்கிறது.




# நாஞ்சில் வீரம்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

அந்தக் காலம் நாஞ்சில்நாடு, வீரர் நாடாயிருந்தது. இந்தியச் சரித்திரத்தில் நாஞ்சில் நாட்டாரைப் போலக் கஷ்டப்பட்டவர்கள் இல்லை என்னலாம். திடீரென்று நாயக்கர் சேனை படையெடுக்கும். ஊர் கொள்ளையாகும். பிணம் குவியும். மாடு கன்றுகள் போய்விடும். பணம் காசெல்லாம் பகைவர் வழித்துக்கொண்டு போய்விடுவார்கள். முதிர்ந்த நெற்கதிர்களைக்கூட விடமாட்டார்கள். பொதுஜனங்கள் இரத்தக் கண்ணீர் விட்டுக்கதறுவார்கள். எந்தப் பகை வந்தாலும் இந்த நாட்டைப் பொட்டலடிக்காமற் போவதில்லை. இந்த நிலையில் வரிகள் அசாத்தியமாயிருந்தன. நாஞ்சில் வேளாளர் அடிக்கடி பொதுக் கூட்டங்கூடி கேரளாதிபதிக்கு மகஜர் அனுப்பினர். ஆத்திரத்தில் புரட்சியும் பண்ணினர்...... ஒன்றும் பலிக்கவில்லை.

இராமவர்மனுக்குச் சரியாக எடுத்துரைப்பாரில்லை. ஏன்? வலிய சர்வாதிகாரி சங்கரனார் பயங்கரனார். அவர் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்பவர். சுய ஜனங்களைத் தாண்டி அவர் திருப்பார்வை செல்வதில்லை. அவர் திவானாய் விட்டால் சொல்லவேண்டுமா? திவான் இராமவர்மாவை க்ஷேத்திராடனங்களுக்கும், குமரி முழுக்கிற்கும், முறைஜபங்களுக்கும் அனுப்பி விட்டுத் தாம் சர்வாதிகாரம் செலுத்தத் தொடங்கினார். அவர் இட்டமே சட்டம். யாராவது மூச்சுவிட்டால் சிறை.

நாஞ்சில்நாட்டின்மேல் அவருடைய திருவுளம் பலமாகச் சென்று வலுவரி விதித்து விட்டது. பஞ்சமும், பறிகொடுப்புமாயிருந்த ஜனங்கள் குய்யோ முறையோ என்று அலறினார்கள். இராமவர்மருக்கு ஓலை எழுதினார்கள். ஓலை போய்ச் சேர்ந்தால்தானே! "எம்மைக் காக்க யாருமில்லையோ?" என்று பொது ஜனங்கள் கூட்டங்கூடிக் கூக்குரலிட்டனர். அக்கூட்டத்தில் ஒருவன் எழுந்து நின்றான்.

வேலுத்தம்பி—வாட்ட சாட்டமான ஆள். இரும்புத் தசைகளும், நெருப்புப் பார்வையும், உருக்கு நெஞ்சமும் முறுக்கு மீசையும் கொண்ட நாஞ்சில் நாட்டுத் திருமேனி, "சகோதரர்களே! நான் உங்களைக் காக்கிறேன்" என்றான் வேலு.

"எப்படி?"

"வழியுள்ளது"

"என்ன வழி?"

"அஞ்சாமை. தைரியமாக என் பின்னே வரத் தயாராய் இருங்கள்.

"சரி"

"உயிர் போனாலும் பயப்படாதீர்கள்"

"சரி"

வேலுத்தம்பி ஜனங்கள் படுந் துயரத்தை விரிவாக எழுதி அரசருக்கு ஓலை அனுப்பினான். அது ஒற்றரைத் தாண்டிச் செல்லவில்லை. அச்சமயமே வரி வசூலுக்கு அதிகாரிகள் தடபுடலாக வந்து சேர்ந்தனர். வேலுவின் வரிப்பணம் நீண்ட நாட்களாகவே பாக்கியிருந்தது. அதிகாரி அவனைக் காண்பதே முயற்கொம்புதான்.

இன்று அவனே அதிகாரிக்கு முன் தைரியமாக வந்தான். அதிகாரி வியப்புடன் பணம் கேட்டார்.

"ஐயா! நான் வரிதர முடியாது. செய்வதைச் செய்யும்" என்றான் வேலு!

"சரி நீ கைதி; வா திருவாங்கூருக்கு"

"இதோ இப்படியே வருகிறேன்"

விசாரணை தடபுடலாக நடந்தது. மகாராசா அப்போதுதான் விஷயத்தைக் கேட்டார்.

பலமான காவலில் வேலு சென்றான்.

நாஞ்சில்நாடு முழுதும் செல்வம் பொழிகிறது. பஞ்சமென்பதேயில்லை. எல்லாரும் ராஜ விசுவாசத்

துடன் வணக்கமாக வரி செலுத்துகிறார்கள். இந்தப் பயல் ஒருவனே திமிர்கொண்டு வரி மறுக்கிறான்'' என்று எங்கப்பன் குதிருக்குள் இல்லையென்ற முறையில் திவான் பதிலளித்தார்.

அரசரிடம் சென்றபிறகு வேலுவை நோக்கி "மூவாயிரம் ரூபாய் அபராதத்துடன் வரவேண்டுங்காணும். இன்றேல் தூக்கு மேடைதான்'' என்று திவான் அவன் தலையெழுத்திற்கு ஓலை சீவி விட்டார்

வேலு பயப்பட்டானா? "சமூகம் மூன்று நாள் தவணை தரவேண்டும். மூவாயிரத்திற்கு ஐயாயிரம் கொண்டு வருகிறேன்'' என்றான்.

"சரி, வாக்குத் தவறினால் தலை போய்விடும். போம்'' என்று வேலுவை ஜாமீனில் அனுப்பினார் திவான்.

மூன்று நாள் ஆனது. பொழுது விழுந்தது. "அவன் இன்னும் வரவில்லையா?'' என்று திவான் உருமினார்.

"கோபம் வேண்டாம் துரையே! இதோ வந்து விட்டேன்" என்று வேலு முன் வந்தான்.

"கொண்டு வந்திரா மூவாயிரம்?"

"ஆமாம், துரையே! வாக்களித்தபடி ஐயாயிரம் கொண்டு வந்திருக்கிறேன்''

"எங்கே?''

"தாங்கள் பீடத்தைவிட்டிறங்கி வந்தால்ப் பார்க்கலாம். இதோ தங்கள் பார்வைக்குக் கலகலவென்று

ஐயாயிரம் தயார் செய்கிறேன்" என்று வேலு வெளியே சென்றான்.

திவான் எட்டிப் பார்த்தார்; கத்தியும், கம்புமாக ஒரு பெரிய சேனை சுற்றிலும் நின்றது.

வேலுத்தம்பி வாக்களித்த படியே ஐயாயிரம் கொண்டு வந்தான். என்ன பணமா? இல்லை. ஐயாயிரம் நாஞ்சில்நாட்டு வேளாளர் படைதான்.

வேலு "தைரியம், இதோ சுதந்திரம்" என்று ஆட்களை ஊக்கப்படுத்தினான்.

ஆட்கள் "அரசே! எங்கள் குறை தீர்க்கவேண்டும்" என்று அலறினார்கள். காவலர் திவானிடம் அலறி ஓடினார். திவான் இராமவர்மாவிடம் ஓடினார். அதற்குமுன்பே வேலுத்தம்பி ஜனவுரிமைப் பத்திரத்தை அங்கே நேராக அனுப்பிவிட்டான். இராமவர்மா பத்திரத்தைப் படித்தார். அதன் சுருக்கம் இதுவே.

"பொது ஜனங்கள் மிகவும் வருந்துகிறோம். எங்களைக் கருணையில்லாமல் வலிய வரிகள் போட்டு நசுக்கக்கூடாது. ஏன் என்றால் எமலோகந்தான் கதியாயிருக்கிறது. இந்தத்திவானை உடனே வீட்டிற்கனுப்பி விடவேண்டும். எங்கள் வரியைக் குறைக்கவேண்டும். என்னைப் பொதுஜனப்பிரதிநிதியாக ஏற்கவேண்டும். இல்லாவிட்டால் கலகம் நடக்கும். உயிருக்கு நாங்கள் பயப்படவில்லை"

இராமவர்மா மிகவும் கருணையுள்ள அரசர். நிரம்பப் படித்த வேதாந்தி. தம்மைப்போல மன்னுயிரை மதிப்பவர். ஜனங்கள் துயரை அவர் இன்றே அறிந்தார். உடனே அவர் உரிமைப்பத்திரத்தில் கையெழுத்திட்டார். புரட்சிக்கார வேலுவை நேசமுடன் அழைத்தார்.

"ஐய! நீ கேட்பது நியாயமானது. உங்கள் துயரத்தை எனக்கு அறிவிக்காமல் மூடு மந்திஞ் செய்தவரை இதோ நீக்கிவிட்டேன். வரி குறையும். உன்னைப்போன்ற தைரியசாலி எனக்கு வேண்டும். நீ நமது மந்திரி சபையிலிருந்து......உனது வீரர்கள் எனது சேனபலமாயிருக்கட்டும்" என்றார்

வேலுத்தம்பிக்கு உச்சி குளிர்ந்து போயிற்று. "மகாராஜா, மகாராஜாதான். வாழ்த்துங்கள் நமது மன்னரை" என்றான்.

"ஜய கேரள வர்மா வாழ்கவே! என்று பொது ஜனங்கள் ஆவேசமாகப் பாடினார்கள். வேலுத்தம்பி வியாபார மந்திரியாகிப் படிப்படியாகச் சர்வாதிகாரியாகிச் செய்த லீலைகள் வேறுகதை.

ஆங்கிலச் சரித்திரத்தில் கிங்ஜான் ஜனவுரிமைப் பத்திரத்தை (மாக்னகார்டா) அவமதித்து காடிழந்ததை நாம் அறிவோம். ஜனவுரிமையை நன்குமதித்து நாடாண்ட இராமவர்மனைப் பற்றி நாம் பெருமை கொள்ளவேண்டும். அத்துடன் நாஞ்சில்நாட்டார் நெஞ்சுரத்தையும் மெச்சவேண்டும். நாஞ்சில் வீரம் வாழ்க!

---

*அதே சமயம் ஒரு தாரகை உருகி மற்றொன்றைத் தாவியது. அந்த வெள்ளியும் தன்னிடத்தை விட்டு உருகிப்பாய்ந்தது. என்ன இதில் ஏதாவது தத்துவம் உண்டுமா?*

# உருகிய வெள்ளி

**'திலகம்'**

**குமரேசன் அந்தப் பலசாக்குக் கடையில் கணக்குப்பிள்ளையாக இருந்தான். அவனது சிரித்த முகமும், சிதேவியும் அந்தக் கடைக்கே ஒரு தனிய மூகைக் கொடுத்தன. யாரிடமும் அவன் இனிமையாகப் பேசுவான். கலகலவென்று அவன் பேசும் வார்த்தைகளில் நகைச்சுவை நிரம்பியிருக்கும். இயற்கையாகவே கணக்கிலும் அவன் கெட்டிக்காரனாக இருந்தான். சிக்கலான கணக்குகளெல்லாம் இவனிடம் சிக்கலறுந்து ஒழுங்கு பட்டுவிடும்; முத்துப் போன்ற இவனது எழுத்துகள் எத்தனையோ பேர்களின் கவனத்தை ஈர்த்துள்ளன.**

**அவனிருந்த கடையில் அநேக வேலைக்காரர்கள் உண்டு. ஆயினும் காலையில் கடைதிறக்கும்**

பொறுப்பு குமரேசனையே சார்ந்திருந்தது. குமரேசன் கடை திறப்பதில் முதலாளிக்கு அவ்வளவு திருப்தி.

காலையில் கடை திறந்ததும் குமரேசன் சாமான்களை எல்லாம் ஒழுங்குபடுத்தி வைப்பான். கடையைச் சுத்தம் செய்து, வாசலில் தண்ணீர் தெளித்து அழகு செய்வான். பிறகு மிகுந்த தூரம் வாசம் வீசும் ஐவ்வாது பத்தியை முதலாளியின் பட்டறைப் பக்கத்தில் பற்றி வைப்பான். இதன் பிறகுதான் அவன் தனது ஆசனத்தில் அமர்வது.

இந்த சமயத்தில் பக்கத்துக் கிராமத்திலுள்ள பிள்ளைகளெல்லாம் அந்தப்பாதையின் வழியாகப் பள்ளிக்கூடம் போகத் தொடங்குவார்கள். இவர்களின் வேடிக்கைப் பேச்சுகளும், விளையாட்டுச் செய்கைகளும் குமரேசன் கருத்தைக் கவரும். அவைகளில் மனம் பறிகொடுக்கும் அவன் தனது பிள்ளைப்பிராயப் பள்ளிக்கூட வாழ்வினைப்பற்றி எண்ணுவான். கழிந்த அந்நாட்களின் பழமையில் அவன் மனம் புதைந்து கிடக்கும். அந்த ஆனந்தத்தை எண்ணி எண்ணி அவனது மனம் மகிழ்ச்சியை அடையும். இதனிடையே கடை வேலைகளையும் கவனித்துக் கொள்வான். இவ்வாறாகக் கொஞ்சம் பொழுது செல்லும். இதற்குள் முதலாளியும், மற்ற வேலையாட்களும் வந்து சேர்வார்கள்.

2

ஒரு நாட்காலையில் குமரேசன் தனது வேலைகளை எல்லாம் முடித்துக்கொண்டு தனிமையாகத் தனது ஆசனத்தில் அமர்ந்திருந்தான். அப்போது பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் கமலம் என்னும் ஓர் இளங்கன்னிகை சில சாமான்கள் வாங்க அங்கு வந்தாள். தான் குறித்துக்கொண்டு வந்திருந்த துண்டுப்படி எல்லாம் வாங்கினுள். பின் அவைகளை அங்கேயே வைத்துவிட்டு, பள்ளிக்கூடத்திலிருந்து சாயுங்காலம் திரும்பும்போது எடுத்துச்செல்வதாகச் சொல்லி பள்ளிக்கூடம் போனுள்.

பதினுன்கு வயதுக்கு மேற்படாத அந்த இளங் கன்னியின் அழகில் குமரேசன் மூழ்கி விட்டான். அடக்கத்தின் அடித்தளத்தினின்றும் பிறந்த அவள் வார்த்தைகள், குமரேசனின் காதுகளுக்கு காதல் கீதத்தின் இனிமையைக் கொடுத்தன. அவளின் இதழ்களில் உதித்த புன்முறுவல் என்னும் கதிரவன் குமரேசனின் இளமை உள்ளத்தில் காதல்க் கதிரைப் பரப்பியது. அவன் அவளைத் தேவதையின் சாயல் உருவம் எனக்கருதினுன். ஏதோ இயற்கையாக அவன் உள்ளத்தடத்தில், அவளைப்பற்றிய பாசம் என்னும் மலர் மலர்ந்து, மணங்கமழ ஆரம்பித்தது.

* * *

கமலம் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவள். குமரேசன் குலத்தைவிட சமூகம் உயர்ந்த குலம்

என்றுகூறிக்கொள்ளும் ஒரு குலத்தில்தோன்றியவள். இளமைப்பருவத்திலேயே அவளிடம் அறிவுத்தேவி நடனம் செய்தாள். சுந்தடியற்ற காட்டில் மலர்ந்த ரோஜாமலர்போல், அவள் அந்தக் கிராமத்தின் நாயக மாய் விளங்கினள். அவள், உயர்ந்த குணங்களால் அந்தக் கிராமத்தாரின் அன்பிற்கு உரியவளாக இருந்தாள்.

சாயும்காலம் வரும் வரை குமரேசன் மனது நிம்மதி அடைய வில்லை. அந்தக்குமரி மறுபடியும் எப்போது கடைக்கு வருவாள் என்று அவள் வரவை எதிர் பார்த்திருந்தான். பாதையில் கேட்கப்படும் குரல்கள் அவள் குரலென்று அவன் எத்தனையோ தடவை திரும்பிப்பார்த்துப்பார்த்து, அவளல்ல என் பதை அறிந்து ஏமாற்றம் அடைந்தான்.

கமலம் கடைசியாக வந்து சேர்ந்தாள். தன் சாமான்களை எல்லாம் எடுத்துக் கொண் டாள். குமரேசனே பக்கத்தில் வந்து எல்லாவற்றை யும் எடுத்துக்கொடுத்தது. அவள் போகும்போது குமரேசனுக்கு நன்றி செலுத்துமுறையில் அவனை ஒரு பார்வை பார்த்தாள். அந்தப் பார்வை அவள் அவன் அழகையெல்லாம் அள்ளிப்பருகுவது போலி ருந்தது. குமரேசன் ஒரு நொடிப்பொழுது தன்னை மறந்தான். அவன் உடலெங்கும் ஒரு இன்ப உணர்ச்சி. இதுவரையிலும் பெருத ஓர் அனுபவத்தை அவன் அன்று பெற்ருன்.

## 3

ஒவ்வொரு நாளும் கடையில் கமலம் குமரே சனைக் கவனித்தே செல்வாள். குமரேசன் புன்முறு வலுக்கு அவள் புன்முறுவலும் பதில் கொடுக்கும். இவர்களின் இப்பழக்கம் இருவரிடையும் நெருங்கிய தொடர்பை உண்டுபண்ணிவிட்டது. இருவர்க்குள் ளும் ஒருநாள் தரிசனம் கிடையாவிடில் அது அவர் களால் சகிக்க இயலாததாய் இருந்தது. இவ்வாறு எவ்வளவோ நாட்கள் கழிந்தன.

சந்திரிகை உலகத்தை அமர இன்பத்தில் ஈடு படச் செய்யும் வேளையிலும், அந்திப்பொழுதிலும் குமரேசனுக்கு கமலத்தின் கற்பனை உருவமே மனத் திரையில் தோன்றும். ஏகாந்தமாய் அவன் சோலை யிலும், பூந்தோட்டங்களிலும் சுற்றித் திரியும்போது அவன் அவளைப்பற்றிச் சிந்திப்பான். அவனது இந்தச் சிந்தனை ஒரு எல்லையின்றி நீண்டு செல்லும்.

கமலம் வேறுபட்ட குலத்தினள் என்பதை அவன் நன்ருக அறிந்திருந்தான். எதிர்கால வாழ்க் கைச் சிற்பத்தை தாமிருவரும் சேர்ந்து அழகுபடுத் துவதற்கு சமூகம் குறுக்கிட்டுள்ளது என்பதையும் அவன் அறியாமலில்லை. ஆயினும் பாசத்தை அறுத் துத்தள்ள அவனல் இயலவில்லை. தனது இதய ஆச னத்தில் ஊழின் வன்மையாலோ வேறு எதனுலோ அமர்ந்துவிட்ட அந்த இளங்குமரியை அதிலிருந்து மாற்றுவதற்கு அவன் எவ்வளவோ முயன்றும் அவ னல் முடியவில்லை.

* * *

வீட்டு வெளித் திண்ணையில் ஒரு நாளிரவு, குமரேசன் நித்திரை செய்துகொண்டிருந்தான். அப்போது அவன் ஓர் இரக்கமான கனவு கண்டான். கமலம் எங்கோ ஓர் பாதையில் மிகவும் வேகமாகப் போய்க் கொண்டிருந்தாள். குமரேசனும் அவளைப் பின்தொடர்ந்து சென்றுகொண்டிருக்கிறான். கமலம் குமரேசனைத் திரும்பிப் பார்த்தாள். அவளது முகம் துன்பத்தால் உலர்ந்திருந்தது. கண்கள் சிவந்திருந்தன. அவைகள் கண்ணீரைக் கொட்டிய நிலையில் இருந்தன. இவள் குமரேசனை இரக்கமான தோற்றத்தோடு பார்த்தாள். ஆனால் அவளின் வாயினின்றும் ஒரு வார்த்தையும் வெளிக்கிளம்பவில்லை. இந்தக் கோலத்தைக் கண்டதும் சொல்ல முடியாத சோகம் குமரேசனின் இதயத்திற் பொங்கி எழுந்தது. திடீரென அவன் விழித்துவிட்டான். தலையணை பூராவும் கண்ணீரால் நனைந்திருந்தது. எதிரே வானம் மிகவும் விளக்கமாக அவன் கண்களுக்குத் தென்பட்டது. கணக்கற்ற தாரகை மலர்கள் அங்கே சிதறிக் கிடந்தன. அதே சமயம் ஒரு தாரகை உருகி மற்றொன்றைத் தாவியது. அந்த வெள்ளியும் தன்னிடத்தைவிட்டு உருகிப் பாய்ந்தது. என்ன, இதில் ஏதாவது தத்துவம் உண்டுமா?

இக்காட்சி குமரேசனுக்குப் பெரிய மனக் கலக்கத்தைக் கொடுத்தது. இதன் இரகசியத்தை அவனால் அறிந்துகொள்ள இயலவில்லை. அன்றைய இரவுப்பொழுதை இந்த எண்ணம் கலந்த உறக்கத்தில் கழித்தான். இந்த நிகழ்ச்சிகளெல்லாம் மறுநாள்

அவன் மனத்திரையை விட்டு காலே நிலவைப்போல் மெள்ள மெள்ள மறைந்துவிட்டன.

## 4

கொஞ்ச நாட்களாகக் கமலம் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லே. இதன் காரணம் என்னவென்று குமரேசன் தனக்குள்ளேயே சிந்தித்தான். 'தான் இனிப் பள்ளிக்கூடம் வருவதில்லே' என்றுகூட அவள் அவனுக்கு அறிவிக்கவில்லே. எனவே அவள் நோயால் படுத்திருக்கலாமோ என அவன் எண்ணினன். இல்லாவிட்டால் ஒருவேளே அவள் படிப்பைத்தான் நிறுத்தியிருக்கலாமோ என நினேத்தான். ஒவ்வொரு நாளும் கமலத்தின் வரவை எதிர்பார்த்து எதிர்பார்த்து அவன் ஓய்ந்து போனன்.

கமலத்திற்கு கலியாணம் ஆகிவிட்டதென்ற செய்தியை எவ்வளவோ நாட்களுக்குப் பிறகு குமரேசன் அறிந்தான். அவள் கணவர் நெடுந்தொலேயிலுள்ள ஒரு பட்டண வாசியென்றும், அவர் ஓர் அரசாங்க உத்தியோகஸ்தர் என்றும் கேள்விப் பட்டான். அதோடு அவனுக்கு, கமலம் இப்போது புக்ககத்தில் இருக்கிருள் என்பதையும் அறிய முடிந்தது.

இச் செய்திகள் குமரேசனுக்கு ஒரு பெரிய ஏமாற்றத்தைக் கொடுத்தது. கனவில் சிறிதளவும் நம்பிக்கை கொள்ளாத அவன், அன்று தான் கண்ட கனவைப்பற்றி மிகவும் சிந்தித்தான். வானத்தில் வெள்ளி இந்த முடிவைக் காட்டுவதற்குத்தான் அன்று

உருகிப் பாய்ந்ததோவென ஐயுற்ருன். அந்தக்காட்சி இந்த முடிவின் அறிகுறியாக அவனுக்குத் தோன்றியது.

அவன் நெடு நாட்களாகக் கட்டிய சிந்தனைக் கோபுரம் இப்போது சுக்குச் சுக்காய்த் தகர்ந்தது. ஆயினும் கமலத்தின் உருவப்படம் மட்டும் அவன் நெஞ்சக அறையை விட்டு மறையவில்லை. அவளிடம் அவனுக்கு அன்பும் பாசமும் பெருகியே வந்தது. அவளுக்கு அவன் ஓர்வித தெய்வீக வணக்கத்தைச் செலுத்திக்கொண்டே இருந்தான். மணமான அவளை ஒருமுறை இன்னும காண்பதற்கு அவன் நெஞ்சு துடிதுடித்துக் கொண்டிருந்தது. அதில் தனக்கு எல்லையற்ற சாந்தி கிடைக்குமென அவன் நம்பினுன். அந்த நாளையும் எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்.

5

காலதேவனின் வேகத்தால் வருடங்கள் நான்கு ஓடி மறைந்தன. கமலம் இப்போது தன் தாய் வீட்டிற்கு வந்திருக்கிருள். அவளுக்கு இரண்டு வயது நிரம்பிய ஓர் ஆண் குழந்தையும் உண்டு.

அன்று பக்கத்துக் கிராமத்தில் நடக்கும் தேர்த் திருவிழாப் பார்க்க அவள் தன் கணவனுடன் சென்ருள். அந்தப் பெரிய கூட்டத்தில் கமலத்திற்கு எத்தனையோ தன் பள்ளிக்கூட சிநேகிதிகளோடு சந்திப்பு ஏற்பட்டது. அவர்களோடு அவள் என்னவெல்லா

மோ பேசிக்கொண்டாள். அவர்கள் அவள் குழந்தைக்கு விளையாட்டுப் பொருட்களும், தின்பண்டங்களும் வாங்கிக்கொடுத்து கமலத்திடம் தமக்குள்ள அன்பின் ஆழத்தை அந்தக் குழந்தையின் மூலமாகக் காட்டினாகள்.

கமலம் தன் கணவனுடன் திரண்டுவரும் கூட்டத்தைக்கண்டு ஓர் பக்கத்தில் ஒதுங்கி நின்றாள். அப்போது கையில் ஒரு மிட்டாய்ப் பெட்டியுடனும், ஒரு அழகிய பொம்மையுடனும் குமரேசன் அவ்விடம் தோன்றினான்.

கமலத்தின் கையிலிருந்த குழந்தையிடம்அவைகளை நீட்டினான். அக்குழந்தை அவைகளைவாங்குவதற்குக் கைகளைத் தாவி நீட்டியது. கமலம் தன்னை மறந்த ஒரு வியப்புடன் அவைகளை வாங்கிக் குழந்தையின் கையில் கொடுத்தாள். குழந்தை மகிழ்ச்சியினால் சிரிப்புக் கொண்டது. கமலத்திற்கு ஒன்றுமே தோன்றவில்லை,

கமலத்தின் கணவர் குமரேசனைப் பார்த்தவண்ணம் புன்முறுவல் வெளித்தோன்ற "இவர்கள் யார் கமலம்? எனக்குத் தெரியவில்லையே" என்று கமலத்திடம் கேட்டார்.

"இவர்கள் எனக்கு அண்ணா. எங்கள் வீட்டின் அடுத்த வீட்டில் அதிகநாள் தாமதித்திருந்தார்கள்.

எங்களுக்கு மிகவும் வேண்டியவர்கள்'' என்று சிரித்த முகத்துடன் பதில் சொன்னாள் கமலம்.

குமரேசன் அங்கு அதிக நேரம் தாமசிக்கவில்லை. அவன் எண்ணம் பூர்த்தியாயிற்று. குழந்தையைப் பார்த்தவண்ணம் அவர்கள் இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டு கூட்டத்தினுள் மறைந்துவிட்டான். ஆனால் கமலத்தின் இதயத்தில் மட்டும் அந்தப் பழைய கால நினைவுகள் அந்தக் கூட்டத்தைவிட எத்தனையோ மடங்கு பெரிதாக வளர்ந்து கொண்டே இருந்தன.



*இந்த வசந்த ருதுவின் எழிற் கொள்ளை, இசைந்த என் இளமைக்கு முறுக்கு ஏற்ற ஏற்ற என்னைக் கவ்விய இன்ப வேதனை என் நெஞ்சில் அனல் எழுப்பிற்று. தனிமையின் ஏக்கம் அதை வளர்த்தது . . .*

# அவள் நினைவு

'செந்தாமரை'

தன்னை மறந்தின்பமுற நான் விரும்பும்போதெல்லாம் எனக்கு அவள்—அந்த சரோஜினி—தான் வந்து உதவுவாள். அவளை நான் நினைத்துவிட்டாலேபோதும். அப்புறம் இந்த உலகத் துன்பம், உடல் நோவு, இதயத் தவிப்பு இவையெல்லாம் என் நினைவுக்குத்தான் வருமாக்கும்?

* * * * *

ஐந்து வருடங்களுக்கு—இல்லை—ஆறு வருடங்களுக்குமுன் கிறிஸ்துமஸ் விடுமுறைக்காக என் வீட்டிற்கு வந்திருந்தேன். அப்பொழுது வந்து கழிந்த ஒருநாளை—என் வாழ்க்கையின் இன்பமெல்லாம் தேங்கி நிற்கும் அந்த நாளை—நான் மறக்க முடியுமா?

வழக்கம்போல் அன்று காலையில் படுக்கையிலிருந்து சோம்பல் முறித்துக்கொண்டு எழுந்திருந்து

முகம்கழுவி விட்டு வந்து நாற்காலியில் இருந்தேன். எதிரிலே இருந்த மேஜைமேல் இரண்டு கால்களையும் தூக்கிப் போட்டுக்கொண்டு, கவிஞன் போதமுற்ற பொழுது பொங்கிவந்த தீஞ்சுவையைப் பருக ஆரம் பித்தேன்.

ஒரு அழகி. அழகி என்றால் இலேசான அழ கியா? கவிதைக் கனிபிழிந்த சாற்றில் பண், கூத்து இவற்றின் சாரமெல்லாம் ஏற்றி அதனோடு இன்ன முதையும் கலந்து காதல் வெய்யிலில் காயவைத்த கட்டியிலிருந்து செய்தெடுக்கப்பட்ட அழகி. இப்ப டிப்பட்ட அழகியின் உள்ளத்தை ஒரு மாயக் கள் ளன் கவர்ந்து சென்றுவிட்டானும்! திக்குத் தெரியாத கொடிய காட்டில், எங்கும் முட்புதர்கள் மண்டித் துயர்கொடுக்க, விழுந்து விழுந்து எழுந்து ஓடி அக் கள்வனைத் தேடி அலைகிறாள் அவள்; இரத்தம் கக்கும் தன் மலர்ப்பாதங்களையும், குவிந்து விம்மும் மார் பினால் வருந்தித் தளரும் இடையினையும் பற்றிய எண்ணமே இல்லாமல்! ஏன்?

"ஏன்?" என்ற எண்ணத்தில் மூழ்கி இருந்த என் மனதைத் தூரத்தில் எங்கோ இருந்து காற் றில் மிதந்து வந்த 'டாங் டாங்' என்ற மணியோசை கலைத்தது. காதைக் குடைந்து கதை சொல்லும் காற்று வந்த திசைப்பக்கம் திரும்பிப் பார்த்தேன், மாடியில் நானிருந்த அறையின் ஜன்னல்வழியாக. தூரத்திலே வான வெளியை நோக்கி மோன நிலையில் நின்ற கிறிஸ்

தவக் கோயிலைக் கண்டேன். அப்பொழுதுதான் எனக்கு ஞாபகம் வந்தது அன்று கிறிஸ்துமஸ் தினம் என்றும், அதற்காகத்தான் விசேஷ முறையில் மணி அடித்து நாதம் எழுப்புகிறார்கள் என்றும். கிறிஸ்து மஸ்—கோயில்-மணி இவை மின் வெட்டும் நேரத்தில் என் சிந்தையில் அவள் நினைவைத் தூண்டிவிட்டன....

என் உள்ளத்தைக் கவர்ந்த அக்கள்ளி—என் அள்ளு சுவைப் பேரழகி—அந்த சரோஜினி—கிறிஸ் துமஸ் பிரார்த்தனை நடக்கும் அக்கோயிலிலே இப் பொழுது இருப்பாள், இயேசுநாதரிடம் தன் குறை இரந்துகொண்டு.

அவள் அங்கே இருந்தால் இங்கு என் மனம் சும்மா இருக்குமா? இன்ப லாகிரியில் சிக்கி அது 'அமுத கீத வலை' பின்ன ஆரம்பித்தது.

பின்னி முடிந்த சடைக் கொண்டை; கொண்டை முழுதும் மணம் கொட்டும் தயிலம்; அதன்மேல் குந்தி இருந்து குலுங்க நகைக்கும் மலர்க்கொத்து; நிலவு சிந்தும் முகம்; ஆளை விழுங்கும் எழிற்கண்கள் தாண்டிப் பதுங்கும் கண்களுக்கு மை; வில்லை வளைத்த புருவம்; இரத்தம் பாய்ந்து சுரக்கும் செவ்விதழ்கள்; இதழ் விளிம்பை விடுத்துக்கொண்டு முளைக்கும் மலர்ச் சிரிப்பு; 'கலகல' என்றொலிக்கும் வளைகள்; கால்களைத் தொட்டு முத்தமிடும் தண்டை; உடல் வனப்பை மறைக்கும் பட்டுடை வீசு கமழ்—இவை எல்லாமாகச்

சேர்ந்து என்னைத் தாக்கின. மயங்கி விட்டேன், நல்ல மோர்ஜைப் பழைய கள்ளுண்டவனைப் போல

எனக்கு ஒருமாதிரியாக வந்தது. அவள் நினைவு வந்ததின் பின் எனக்கு இருப்புக் கொள்ளுமாக்கும்? கையிலிருந்த புத்தகத்தை மேஜைமீது விட்டெறிந்தேன். எழுந்து வந்து விட்டு மாடியின் முன் நின்ற வண்ணம் கோயிலிருந்த தூரக் கிழ்த்திசையையும் பார்த்த இடைவெளியையும் வெறித்து நோக்கினேன்.

வசந்தத்தின் அழகை எல்லாம் வடித்துக் காட்டும் காலைப்போது. முகிலின் முதுகைத் துளைத்துக் கொண்டே முன்னேறும் காலை இளம்பரிதி உருக்கி விட்ட தங்கம், தழல் குறைந்து தேனாகி எங்கும் பரவியது. பளபளப்பான நதி நெளிந்து நெளிந்து அந்தக் கோயிலருகே ஓடிக்கொண்டிருந்தது. பசிய புல் தரை. அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பூத்து நிறம் நக்கும் மலர்கள். எங்கும் நீளக்கிடக்கும் இலைக்கடல். காய்ந்து கரிந்து பட்டுப்போன பூமியின்மேல், வசந்த கன்னி பச்சை, மஞ்சள், நீலம், சிகப்பு, வெள்ளை முதலிய நிறங்களைக்கொட்டி, வர்ண ஜால வித்தை காட்டி கொழுக்க 'வைத்திருந்தாள், பழைய வீடுகளுக்கு வெள்ளை அடித்துச் சாயம்தீட்டி சொக்க வைப்பதுபோல. வேறு என்றேனுமாய் இருந்தால் அந்த காலைப்பொழுது என் கண்களுக்கும் மனதுக்கும். இப்படித்தான் பட்டிருக்கும்.

ஆனால் அவள் நினைவால் உள்ளம் இளகி வீட்டின் முன் மாடியில் நின்ற எனக்கு அது இப்போது வேறுமாதிரியாகப் பட்டது. பசிய புல் நுனியினுக்கு முத்தம் கொடுக்கும் நீர்த் துளி; முறுக் கவிழ்ந்து நாணிச் சிவந்து முறுவலிக்கும் மலர்கள்; மலர் வாயை விடுத்துச்சென்று கள் அலம்பும் மதுக் குடத்தில் விழுந்து புரண்டு முரலும் வண்டினங்கள்; மரக்கிளையோடு கொஞ்சிக் குலவும் காற்று; மரங்களிலே காதல் கீதம் இசைக்கும் குயில்; கடலில் சென்று கலக்க ஓடும் நதி; முத்தமிடும் முகிற்கூட்டம்.

இந்த வசந்த ருதுவின் எழிற்கொள்ளை, இசைந்த என் இளமைக்கு முறுக்கு ஏற்ற ஏற்ற என்னைக் கவ்விய இன்ப வேதனை என் நெஞ்சில் அனல் எழுப்பிற்று. தனிமையின் ஏக்கம் அதை வளர்த்தது. இருப்புக் கொள்ளவில்லை என்று சொன்னேன்? நிலையும் தான் கொள்ளவில்லை. குறுக்கும் நெடுக்குமாக மாடியின்மேல் நடந்தேன். உயிர் அக்கும் உயிர்நாடி இக்கும் என்ற நிலையில் மனம் அமைதி இழந்து தவித்தது. தூண்டிற் புழுவினைப்போல் சுடர் விளக்கினைப்போல் நீண்ட பொழுதாக என் உள்ளம் துடித்தது.

இதென்ன! நிலையழிந்து நினைவழிந்து நடந்து கொண்டு நிற்கும் என் உடல் ஏன் இப்படிச் சுடுகிறது. கடற்கரை மணலில் பரதவர் மக்கள் வெந்நீக் கொளுத்திச் சுடுகிற மீனின் உடலைப்போல—உடல் வெப்

பத்தைத் தணிக்க உடன்தானே கீழ் இறங்கி குளிர்ந்த நீரில் குளித்துவிட்டு சிறிது நேரத்தில் மீண்டும் மாடிக்கு வந்து நன்கு உடுத்திக்கொண்டு கண்ணாடி முன் நின்று

"குளிர்ந்த நீரில் குளிக்கையிலே - உடம்பு
கொதிந்தது ஏன்டீ சொல்லேண்டி!"

என்று பாடிக் கொண்டே தலையைக் கோதி விட்டு என்னை அழகுபெற அலங்கரித்தேன்; புறப்பட்டேன்.

வீட்டிலிருந்து புறப்படுகையில் நெடுந் தொலைவில் பாதையோரத்தில் தன்னந் தனியாக நிற்கும் அவள் வீட்டுப் பக்கமாக வருவேன் என்று நான் எண்ணவே இல்லை. ஆள் சஞ்சாரமற்று மௌன நிலையில் தூங்கும் பாதை வழியாக நடந்தால் அலைந்து உலைந்து அசைந்த உள்ளம் தேறிச் சிறிது ஆசுவாசம் அடையும் என்று நினைத்தேன். நடந்தேன், மனம் ஒன்றிலும் பற்றுக் கொள்ளாத நிலையில், என்னையும் அறியாமல் என் கால்கள் 'உயிர் இருக்கும் இடம் நாடி' என்னை இழுத்துக்கொண்டு வந்துவிட்டன......

அதோ! அவளும் அவள் பாட்டியும் எங்கிருந்தோ—இல்லை கோயிலில் இருந்து—திரும்பி வீட்டை அணுகிக் கொண்டிருக்கிறார்கள். அவள் ஆகர்ஷண சக்தியின் வேகத்தைத் தாங்கும் வன்மை எனக்கில்லை. அவர்களை நான் நெருங்கி விட்டேன். அவர்களும் என்னை நெருங்கிவிட்டார்கள். என்னைக் கண்டுவிட்ட

அவள் ஆசை வெறி ததும்ப, பல்லிற் கனி இதழில் நிலவு பாய "எங்கே போகிறீர்கள்?" என்று அன்பு சொட்டக் கேட்டாள்.

"சும்மா காலையிலே இப்படி......" என்று நான் இழுத்தேன். அதற்குள் "பாட்டி! என்னுடனே காலேஜில் என் வகுப்பில் ஒருவர் படிக்கிறார் என்று உன்னிடம் நான் அடிக்கடி சொல்வதுண்டல்லவா? அவர் தான் இவர். நம்மூர் மேடை வீட்டுக்காரரின் புதல்வர்" என்று சொல்லி அவள் என்னைத் தன் பாட்டிக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

"அப்படியா" என்று கூறி என்னை அன்போடு பார்த்த பாட்டி "வாயேன் அப்பா வீட்டுக்கு. வந்து சிற்றுண்டி அருந்தி விட்டுப் போகலாம்" என்றாள்.

"என்னத்திற்கு வீண் சிரமம்" என்றேன் துள்ளி வரும் ஆசையை மறைத்துக்கொண்டு.

"சிரமம் ஒன்றுமில்லை. இன்றைக்குக் கிறிஸ்துமஸ். கட்டாயம் வரத்தான்வேண்டும்" என்று பாட்டியின் வேண்டுகோளைப் பின்தாங்குபவள்போல் அவள் தன் அமுத வாய் அசையக் கட்டளை இட்டாள்.

அவள் மேனி நலம், உடற்கட்டு, முகவெட்டு, தேனிலினிய திருத்தநிலை இவற்றால் அடியுண்ட நான், நான் முந்தியோ எனது ஆசை முந்தியோ என அவர்களுடன் வீட்டுக்குள் நுழைந்தேன். சிற்றுண்டிக்கு வேண்டியதைச் செய்ய உள்ளே சென்று

விட்டாள் பாட்டி. மகிழ்ச்சி பொங்கி வழிந்தோடும் தன் அறைக்கு அவள் என்னை அழைத்துச் சென்ருள். ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு "உட்காருங்கள்" என்று கனிவுடனே கூறி "கொஞ்சம் இருந்துகொள்ளுங்கள். இதோ வந்துவிடுகிறேன்" என்று உள்ளே ஓடினுள்.

அவள் உடலில் ஒரு சோபை. நடையில் ஒரு தெளிவு. பேச்சில் ஒரு உணர்ச்சி. தொனியில ஒரு இளமை! மேகத்தைக் கண்டாடும் மயிலை இவள் கண்டிருக்கிருளா?

சிறிது நேரத்தில் பளிச்சென்று மின்னும் ஒரு பெரிய வட்டிலில் என்னவெல்லாமோ தின்பண்டங்களை வைத்துச் சுமந்துகொண்டு மருங்கசைய, இட்டடி குழைய, எடுத்தடி கொப்புளிக்க நடந்து வந்தாள். வட்டிலைக் கீழே இறக்கி அதிலிருந்த பீங்கான் தட்டைகளை எடுத்து ஒவ்வொன்ருக மேஜைமீது பரப்பினுள். உண்ண உண்ண தெவிட்டாத கனிகள், கற்கண்டுபோல் இனிய 'கேக்' வகைகள், நாக்கில் நீர்த் துளிக்கும் பண்டங்கள்! "தின்னுங்கள்" என்று கூறி அவளும் எதிரிலிருந்த நாற்காலியில் அமர்ந்தாள்.

"என்னவெவலாம் தரப்போகிருய்" என்றேன்.

"கேட்டதெல்லாம்தான்" என்ருள்.

"நினைத்ததெல்லாம் தருவாயோ?" என்றேன்.

"நீங்கள் நினைத்ததெல்லாம் என்ன என்று அறிய நான் என்ன தெய்வப்பெண்ணு?" என்ருள்.

"தெய்வப் பெண்தானே நீ" என்றேன்.

நாணித் தலைகுனிந்த அவள் "இவ்வாறு புகழ்ந்துரைக்க எங்கே கற்றுக்கொண்டீர்கள்?" என்றாள்.

"உண்மை. வெறும் புகழ்ச்சி இல்லை" என்று கூறிச் சிரித்தேன்.

இவ்வாறு 'சிரித்துரை கூறியும் கேலிகள் பேசிக் கிளறியும்' பண்டங்களைச் சுவைத்துக்கொண்டிருக்கையிலே:

"கனிந்து சிவந்திருக்கும் இந்த மாம்பழத்தைப் பார்த்தீர்களா?" என்று என்னை நோக்கி அவள் கேட்டாள்.

"உன் கன்னத்தைப் போல் இருக்கிறது" என்று கூறிக்கொண்டே நான் அதை எடுத்து ரம்மியமான அதன் நறுமணத்தை முகருவதற்காக மூக்கின் பக்கம் கொண்டு சென்றேன்.

"என்ன அதை முத்தமிடப் போகிறீர்களா? என்றாள் அவள் குறும்பாக.

"இல்லை. மோந்து பார்க்கிறேன்" என்றேன்.

"இங்கே கொண்டாருங்கள். தோலெடுத்து வெட்டித் தருகிறேன்" என்றாள்.

"நானே வெட்டுகிறேன்" என்றேன்.

'இல்லை நான்தான் வெட்டுவேன்" என்றாள்.

நானா விட்டுக்கொடுப்பவன்! "நான்தான் வெட்டுவேன்" என்றேன் பிடிவாதமாக.

"முடியாது. நான்தான் வெட்டுவேன்" என்று கூறிக்கொண்டே என் கையிலிருந்த பழத்தைத் தட்டிப் பறித்தாள் அவள். என்னை அவள் தொட்டாளோ இல்லையோ எங்களைத் 'தீண்டும் இன்பம்' பற்றிக் கொண்டது. அப்புறம் கேட்பானேன்! 'தூண்டும் இன்ப வாடை'யில் விழுந்து நேரங்கழிவதில் நினைப்பின்றி, சாலச் சிறந்த பல பகற்கனவில் தன்னை மறந்த லயந்தன்னில் நாங்கள் இருந்து விட்டோம்......

தன்னுணர்வுபெற்ற அவள் கத்தியை எடுத்து பழத்தை வெட்டப்போனாள்.

"வேண்டாம். என்னிடம் தந்துவிடு" என்றேன்.

'ஏன்?" என்றாள்.

'கனிந்து சிவந்த இந்தப் பழத்தை யாராவது வெட்டுவார்களா?" என்றேன்.

"பின்னே என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றாள்.

'கடித்துத் தின்னப்போகிறேன்" என்று நான் சொன்னதும் "அப்படியா" என்று சிரித்துக்கொண்டே பழத்தை என்னிடம் தந்தாள். அதை வாங்கி நான் கடித்தேன். சுவைத்தேன்.

"எனக்குங்கூடத்தான் மாம்பழம் தின்ன ஆசையாயிருக்கிறது. கொஞ்சம் கொடுங்களேன்" என்றாள்.

"எச்சிற் படித்திக் கடித்து விட்டேனே!" என்றேன்.

"பாதகமில்லை!" என்றாள்.

இந்தப் பதிலை நான் எதிர்பார்க்கவில்லை. பழத்தை உடனேயே அவள் கையில் கொடுத்தேன்

பழத்தை அவள் வாங்கினாள். பார்த்தாள். கடித்தாள். ருசித்தாள், அறுசுவைப்பேரமுதம் என்ற நினைப்பில்.

அவள் அதைக் கடித்து ருசிக்க ருசிக்க என் உள்ளம் கள்வெறி கொண்டது. நான் உன்மத்தனானேன்.

"பழத்தை இப்படித்தான் கடித்துத் தின்பாளாக்கும்" என்று கூறிக்கொண்டே சூடான தேநீர் கோப்பைகளை ஒரு தட்டில் ஏந்தியவண்ணம் பாட்டி அறைக்குள் நுழைந்தாள்—எங்கள் தனிமை இன்பத்தைக் கலைத்தாள்.

"சிறிது நேரம் அன்பொழுகப் பாட்டியுடனும் அவளுடனும் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தேன். பிறகு எழுந்து, நன்றி தெரிவித்துவிட்டு, விடை பெற்றுப் பிரிய மனமில்லாமல் பிரிந்து, வெளியில் வந்தேன். வழியெல்லாம் இன்ப உணர்ச்சி என்னைப் பிடித்தாட்ட, நடந்து நடந்து வீடுவந்து சேர்ந்தேன்:

* * *

ஆறு வருடங்களுக் கப்புறம் இன்றைக்கு. காலையிலே உறக்கம் விழித்தேன். ஆனால் எழுந்திருக்கவில்லை. படுத்த படுக்கையிலேயே கிடந்தேன். உடலை வருத்திக்கொண்டிருந்த பாரத்தைச் சற்றே இறக்கி

வைத்துச் சுகம்பெற எண்ணினேன். அவ்வளவுதான். அவள் நினைவு வந்துவிட்டது.

"நச்சுத் தலைப் பாம்புக் குள்ளே - நல்ல
நாக மணி யுள்ள தென்பார்.
துச்சப் படு நெஞ்சிலிலே - நின்றன்
சோதி வளரு தடீ"

என்று புலவன் சொன்னதுபோல நைந்து கொண்டிருந்த எந்தன் நெஞ்சுக்குள்ளே அவள் உருவமெடுத்துத் துள்ள ஆரம்பித்தாள்.

ஆறு வருடங்களுக்கு முன் எனக்கு இன்பம் தந்து நின்ற அந்த சரோஜினி இன்று எங்கிருக்கிறாளோ? எனக்குத் தெரியாது. அவள் எங்கிருந்தால்தான் எனக்கென்ன? என் நெஞ்ச வீட்டிலிருந்து அவள் ஓடிவிடப் போகிறாளா? அல்லது அந்த கிறிஸ்தமஸ் தினத்தன்று நடந்த இன்ப நிகழ்ச்சிகள் எல்லாம்தான் என் மனக் குகையிலிருந்து மறைந்துவிடப் போகின்றனவா?

அன்று நடந்த அந்த மோகனக் காட்சிகளை எல்லாம் மிக நுணுக்கமாகப் படம் பிடித்துக்கொண்ட என் மனம் இன்று நான் நினைத்தபொழுது என் அகக் கண்முன் அவற்றை அப்படியே விரித்தது. இன்பம் ததும்பி நின்ற அந்த தினத்தை நான் மீண்டும் அநுபவிக்க ஆரம்பித்து விட்டேன். ஆனந்தம் பொங்கிப் புரளும் உணர்ச்சி வெள்ளத்தில் அவள் என்னோடு நீந்த வந்துவிட்டாள்! இன்ப மதிமயக்கில் நினைவழிந்த நான் என் உடலை மறந்தேன்.

துயரை மறந்தேன். இந்த உலகத்தையும் மறந்தேன். எவ்வளவு நேரம் என்று எனக்குத் தெரியாது!........

"அப்பா! அப்பா!" என்று என் தோளை யாரோ தட்டி உணர்த்தினர்கள். கண்களை விழித்தேனே இல்லையோ என் நினைவில் மிதந்து கொண்டிருந்த அவள் உருவம் எங்கேயோ தூரத்தில் சென்று மங்கி மறைந்தது. சிந்தனை உலகில் சுற்றி சுகத்தில் மூழ்கியிருந்த என்னை, துயரமும் நோயும் தொல்லையும் நிறைந்த இந்த உலகத்துக்கு இழுத்துவிட்ட என் பாட்டி மாத்திரம் என் பக்கத்தில் இருப்பது என் கண்களுக்குத் தெரிந்தது. முட்கள் நிறைந்த பாதையில் நடந்து இரத்தம் கக்குவதையே வாழ்க்கையாகக் கொண்டிருந்த நான், இரண்டு தினங்களுக்கு முன் இரவிலே இருட்டில் மழையில் வந்தபொழுது கால் சறுக்கி ஓடையில் விழுந்தது, அப்புறம் வைத்தியன் வந்து எனது முறிந்த காலுக்கு மட்டை வைத்து கட்டி "உடம்பை உலுக்காதே, சரிந்து படுக்காதே, காலை அசைக்காதே" என்று கூறி எச்சரித்து விட்டுப் போனது—ஆகிய இவை எல்லாம் எனக்கு அப்பொழுதுதான் ஞாபகத்திற்கு வந்தன.

காலில் ஏற்பட்ட குத்து, தரிப்பு, நோவு—இவற்றை என்னுல் சகிக்கமுடியவில்லை. வேதனை தாங்கமாட்டாமல் "அப்பா! அம்மா! ஐயோ! பாட்டி!" என்று அலறினேன்.

"வயது முப்பத்தஞ்சாகிறது. கலியாணம் செய்து கொள். கலியாணம் செய்துகொள் என்று அப்பொழுதே சொன்னேனே கேட்டாயா?" என்று சொல்லி பாட்டி என்னைக் கடிந்துகொண்டாள்.

"ஏன்?" என்றேன்.

"இரவில் நீ உறக்கத்தில் சரிந்து படுத்துக் காலை அசைத்துவிட்டால் கால் பழுத்துச் சலம் வைத்து விடுமே என்று பயந்து இரவெல்லாம் உன் பக்கத்தில் கண் விழித்திருந்தேன். பொழுது விடிந்து இப்பொழுதுதான் எழுந்திருந்து முகம் கழுவப் போனேன். முகத்தைக் கழுவி விட்டுத் திரும்பி வருவதற்குமுன் சரிந்து படுத்து விட்டாய்! காலையும் அசைத்து விட்டாய்! நீ கலியாணம் செய்து உனக்கு மாத்திரம் ஒரு பெண்டாட்டி இருந்தால் அவள் எப்பொழுதும் உன் பக்கத்தில் இருந்து உன்னைக் கவனித்திருக்கமாட்டாளா?" என்றாள்.

நான், "பெண்டாட்டி இல்லாத அதுஒன்றுதான் இப்பொழுது குறைச்சல்" என்றேன் வெறுப்புக் கலந்த எரிச்சலுடன்!



*ஆனால் பாவம்! தன்னை வேறு இரண்டு கண்கள் உறுத்திப் பார்த்துக்கொண்டே இருக்கின்றனவென்பதை அவன் அறியவில்லை. அவன் குழந்தை.*

# அவனும் ஒரு மனிதன்

**எம். கே. பாவா**

அன்று மாணிக்கத்தின் வீட்டில் ஒரே குழப்பம். மாணிக்கத்தின் மனைவி கமலம் பிரசவ வேதனையினால் படாத பாடுபட்டுக்கொண்டிருந்தாள். டாக்டர்களின் உதவியுடன், அவள் உயிருக்காக, மாணிக்கம் எமனுடன் போராடிக்கொண்டிருந்தான். மனித முயற்சியினால் இது ஆகக்கூடிய காரியமில்லை என்று கமலத்தின் மனம் அவளுக்கு உறுதியாகச் சொல்லிற்று. அவள் அதற்காக வருத்தப்படவும் இல்லை! ஆனால்?....அவள் குழந்தை பாலு? அவனுக்கு நான்கு வயதுதானே ஆயிற்று!—அதுதான் அவளின் பெருமூச்சுக்குக் காரணம்.

'கடவுளே! நீர்தான் அவனுக்குத் துணை' என்று அவள் தன் மனதுக்குள் தியானித்த சமயத்தில்தான் "அம்மா! அங்கச்சி வருவாளா" என்று கேட்டுக்

கொண்டே. குழந்தை பானு அவளிடம் நெருங்கி னன். அந்த மரணவஸ்தையிலும் அந்தச் சின்ன மணி வாயிலிருந்து வந்த மழலை மொழிகள் அவளின் தாய்மையுள்ளத்திற்கு எவ்வளவு சாந்தியை அளித்து விட்டது! அவள் சில நிமிஷங்கள், தன் வேதனையை யும் மறந்து, தங்க விக்கிரகம் போன்று தன் பக்கத் திலே நின்ற பானுவைப் பார்த்தாள். தங்கத்தகட்டிலே வயிரக் கற்கள் வழிந்தோடுவதுபோல அவள் கண் ணங்கள் வழியாக இரண்டு கண்ணீர்த் துளிகள் வடிந்தன.

அப்பொழுது அங்கே வந்த மாணிக்கம் பானு வை எடுத்துச்செல்ல முயன்றான். "வேண்டாம! அவ னுக்கு அக்கச்சி வேண்டுமாம். அவன் ஆசையை நிறைவேற்றுங்கள்" என்று தினக்குரலில் அவள் கூறி முடித்ததும், எங்கிருந்தோ ஒரு பிரகாசம் வந்து அவள் கண்களில் புகுந்துகொண்டது. அவள் விழித் துப் பார்த்தாள்; அடுத்த நிமிஷத்தில்?........அவ் வளவுதான் அவள் வாழ்க்கை.

* * *

காலச் சக்கரம் மின்சார வேகத்தில் சுழன்று கொண்டேயிருந்தது! கமலம் மண்ணோடு மண்ணாகி ஆறு வருடங்கள் கழிந்துவிட்டன. மாணிக்கம் தன் இளம் மனைவி புஷ்பத்துடன் உல்லாசமாய் வாழ்க்கை நடத்துகிறான். பானுவின் ஆசை நிறைவேற வேண் டுமே? புஷ்பம் கர்ப்பவதியானள். தன் முதல் தாரத் தின் எண்ணம் ஈடேற வேண்டுமே என்று மாணிக்

கம் துடியாய்த் துடித்தான். "தெய்வமே! என் மனைவி வயிற்றிலிருப்பது பெண்ணாய்ப் பிறக்க வேண்டும்" என்று அவன் ரகசியமாகத் தன் இஷ்டதெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டிருந்தான். "எனக்கு அக்கச்சி வருவாள். உங்களுக்குப் பழமும் கற்கண்டும் தருவேன்" என்று பாலு தன் தோழர்களிடமெல்லாம் சொல்லி வந்தான்.

ஒருநாள் பாலுவுக்கு அக்கச்சி வந்துவிட்டாள். மாணிக்கம் தன் முதல் மனைவியை நினைத்துக்கொண்டான். "கமலம் குணவதி; அவள் பிரார்த்தனை பொய்க்குமா?" என்று ஊரார் பேசிக்கொண்டார்கள். தங்கையைக் கண்ட பாலு தன் தோழர்களைக்கூட மறந்து விட்டான்.

பாலு எப்பொழுதும் தொட்டிலருகிலிருந்து தன் தங்கையைப் பார்த்துக் கொண்டேயிருப்பான். அப்பொழுதெல்லாம் அவன் கண்களிலே அன்பு குதிகொள்ளும்—ஆனால் பாவம்! தன்னை வேறு இரண்டு கண்கள் உறுத்திப் பார்த்துக்கொண்டே இருக்கின்றன என்பதை அவன் அறியவில்லை. அவன் குழந்தை.

ஒருநாள் பாலு தொட்டிலில் கிடந்த தன் தங்கையைத் தொட்டுப் பார்த்தான். அது 'கிரீச்'சென்று சத்தமிட்டு விட்டது. அவன் நடுங்கிப் போனான். அப்பொழுதுதான் அங்கு வந்த அவள்—பாலுவின் மாற்றாந்தாய் — "பிள்ளையை ஏண்டா கிள்ளினாய்"

என்று இரைந்துகொண்டே அவன் தலையில் குட்டினாள். "ஐயோ! நானா கிள்ளினேன்?" என்று அந்தக் குழந்தையுள்ளம் துடித்துக் கேட்டது. அன்றிரவு மாணிக்கம் வந்ததும் பானுவுக்கு அடிகள் கிடைத்தன.

இன்னும் இரண்டு வருடங்கள் காலச் சுழற்சியில் அகப்பட்டு உருண்டோடிவிட்டன. தன் சொந்த வீட்டிலே தான் வேற்றாளாக நடத்தப் படுவதை பானு உணர்ந்தான். தன் தந்தைகூட தன்னைத் துன்புறுத்துகிறார் என்பதை நினைக்க நினைக்க, விரிந்து மலரவேண்டிய அவன் ஹிருதயம் குவிய ஆரம்பித்து விட்டது. 'தங்கம்' என்று அவன் செல்வமாக அழைத்துக்கொண்டு தன் தங்கையை நெருங்கும் போது, அந்த எதுமறியாக் குழந்தைகூட முகத்தைத் திருப்பிக்கொண்டால் பானுவின் மனம் புலம்பாமல் இருக்குமா? அவன் புலம்பிக்கொண்டே நாட்களைக் கடத்தினான்.

பானுவுக்கு உற்சாகம் குன்றிவிட்டது. தன் தந்தையை நினைக்க நினைக்க சோகம் தலைக்கேறி விடும். "தீபாவளியன்று அவர் ஒரு கட்டு ஜவுளி கொண்டு வந்தாரே! தங்கைக்கும் சிற்றன்னைக்கும் விதம் விதமான துணிகள் அதில் இருந்தனவல்லவா? எனக்குமட்டும்தானா இந்தக் கந்தல் துணிகள்?' என்று அவன் நினைத்தபொழுது அழுகை அவனை பொத்துக்கொண்டு வந்துவிட்டது.

வாழ்க்கையை வெறுத்துவிட்ட வேதாந்தி போல பானு நடைப்பிணமாக அலைய ஆரம்பித்தான். அவன் கண்கள் எதையோ தேடி அலைந்தன. அவன் தாயன்பைத் தான் தேடியிருக்கவேண்டும்!

ஒருநாள் அந்தி மயங்கும் வேளை. பானு தன் வீட்டுத் திண்ணையிலிருந்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே யிருந்தான் வான வெளியில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மேகங்களுக் கிடையிலே தன் தாயை அவன் தேடியிருக்கவேண்டும்! அன்று அவன் உள்ளத்தின் பொருமலை எதிரொலிப்பன போன்று பக்ஷிஜாலங்கள் கொக்கரித்துக் கொண்டு விண்ணிலே மிதந்துசென்றன.

'அப்பா!' என்று இரைந்தகூவினள் தங்கம். 'என் கண்ணே!' என்று கூறி அவளை வாரி எடுத்துக் கொண்டான் அப்பொழுதுதான் வீட்டினுள் நுழைந்த மாணிக்கம்.

பானு திரும்பிப் பார்த்தான் "அப்பாவாம்!, அவளுக்கு மட்டும்தான் அப்பா" என்று அவன் முனங்கினன். "என்னடா முனங்குகிறாய்?" என்று சீறினன் மாணிக்கம். "அவன் இதுமட்டுமா செய்வான், இன்னும்செய்வானே" என்று எரிந்து விழுந்து அவன் காதைப் பிடித்துத் திருகினள் புஷ்பம். போதாக் குறைக்கு அந்த அங்கச்சியும் அவனைப் பல்லிளித்துக் காட்டிற்று. பானுவும் இப்பொழுது

வயது வந்தவன்தானே! ரோஷம் எங்கிருந்தோ வந்து அவனைப் பிடித்துக் கொண்டது.

"ஏன் என்னை இம்சிக்கிறீர்கள்? உங்களுக்குத் துன்பமாகவிருந்தால் என்னைக் கொன்று விடுவது தானே!" என்று அவன் தன்னையறியாமலே கூறி விட்டான். "கொல்லவா? வாயா பேசுகிறாய்? எங் கேனும் விழுந்து செத்துத் தொலை போ" என்று கூறிக் கொண்டே திண்ணையிலிருந்த பாலுவை உதைத்துத் தள்ளினன் மாணிக்கம்—அவன் அப்பா.

முற்றத்தில் குப்புற விழுந்த பாலு ஆவேசம் கொண்டவனைப்போல எழுந்து நின்றான். "அப்பா நான் சாகவா வேண்டும்? இந்த உமது மகன் செத் துத்தானே தொலையவேண்டும். சரி! நான் போகி றேன். நாளைக் காலையில் மண்ணிலோ மரத்திலோ, ஆற்றிலோ குளத்திலோ என்னைக் கண்டெடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிக்கொண்டே ஓட ஆரம் பித்தான் பாலு.

அவன் வார்த்தைகளிலே தொனித்த உறுதி யையும், திக்கற்றவனைப் போல அவன் ஓடுவதையும் பார்த்தான் மாணிக்கம். அவனும் ஓர் மனிதன்தானே! அவனும் பிள்ளைகளைப் பெற்றவன் தானே! அவன் ஆசையை நிறைவேற்றுங்கள்!" என்ற கமலாவின் கடைசிப் பிரார்த்தனை மின்னலைப் போன்று அவன் உள்ளத்தைத் தாக்கிற்று. அவன் நிலைகுலைந்தான்.

'மகனே! நில்'' என்று கூவியவண்ணம் தன் மகனைப் 'பிடிக்க ஓடினன் அவன். பாலு ரோட்டில் போய் விட்டான். ''நில் நில்'' என்ற தந்தையின் குரலைக் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான். 'கொல்' என்று அவன் சிரித்த ஒலி அடங்குமுன் கால தூதனைப்போல் விரைந்து வந்துகொண்டிருந்த ஒரு மோட்டார் லாறி அவனைத் தூக்கி எறிந்துவிட்டு பறந்துவிட்டது. ''ஐயோ'' என்ற அலறல் விண் ணில்ப் போய் எட்டியது. பாலுவின் உயிரற்ற உடல் தன் அப்பாவின் பாதத்தடியில் போய் விழுந்து கிடந்தது.

---

தன் தொழிலை அவன் வெறுக்கவில்லை. ஊராரின் அட்டகாசத்தையும், உயர்நலம் என்ற இறுமாப்பையும் பரம்பரை அடிமைத்தனம் என்ற உணர்ச்சியையும், அவனால் சகித்துக்கொள்ளமுடியவில்லை.

# ஸலூனின் ஆரம்பம்

ஆ. சுப்பையா

நமது நாடு நாகரிகமுற்றிருப்பதற்குக் காரணமாயிருந்தவர்கள், இருப்பவர்கள் ஜாப்தாவில் மந்தாரப்புதூர் முத்தப்பனுடைய பெயரும் சேர்க்கப்பட வேண்டியதாகும். மந்தாரப்புதூர் மலையடிவாரத்திலுள்ள ஒரு கிராமம். மற்ற கிராமங்களைப்போலவே இதிலும் அக்ரகாரமும், அரசடிப் பிள்ளையார் கோவிலும், சிற்றாறும், உழவர் குடிசைகளும், கொல்லர் பட்டறையும் முக்கிய அம்சங்களாக விளங்குகின்றன. ஊரிலிருந்து கூப்பிடு தொலையில்தான் முத்தப்பனும், அவனுடைய வயது முதிர்ந்த தாயும் வசித்துவந்தனர். அவன் நாவித குலத்தைச் சேர்ந்தவன். பரம்பரையாகவே-அதாவது மந்தாரப்புதூர் ஏற்பட்ட காலத்திருந்தே—அவன் குடும்பத்தினர் மந்தாரப்புதூர் வாசிகளை நம்பியே வாழ்ந்துவந்தனர்.

யாரோ ஒரு பெரிய ரிஷி இந்த ஊர் மலையில் தவஞ்செய்ததாயும், அவர் சூரிய வெப்பம் தாங்க மாட்டாமல், சூரியன் அங்கு தலைகாட்டக்கூடா தென்று கட்டளை போட்டுவிட்டதாயும் ஸ்தலபுரா ணம் கூறுகிறது. இந்த மலை சமுத்திரத்தை அடுத் திருப்பதால், மேகங்கள் சதா அதோடு கொஞ்சிக் குலாவிக்கொண்டிருக்கும். அதனால் சூரிய வெப்பமே அந்த ஊரில் அதிகமாகத் தலைகாட்ட முடியாது. எப்போதும் மப்பும் மந்தாரமுமாகவே இருக்கும். இதுதான் இந்தப் பெயருக்குக் காரணம்.

எது எப்படி இருப்பினும், மந்தாரம்புதூர் சீக் கிரமாகவே பெயர் பெற்றுவிட்டது. எல்லாவற்றுக் கும் முத்தப்பனும், அவனுடைய சகாக்களுந்தான் காரணம்.

முத்தப்பன் என்னுடைய பால்யத் தோழன் கிராமத்து வாத்தியார் அவனை அக்ரகாரத்துக் குள் நுழையச் சம்மதிக்காததால் அவன் அடுத்த கிராமத்திலிருந்த பாதிரியார் பள்ளிக்கூடத்திற்குத் தினமும் மூன்று மைல் நடந்து போய்ப் படித்து வந்தான். அவன் தாழ்ந்த குலத்தான் என்றும் அவன்கூடச் சேரக்கூடாதென்றும் எனது பெற்றோர் கள் எவ்வளவோ தடுத்தும், நான் அவனோடு கொண் டிருந்த தொடர்பை அறுத்துக்கொள்ள முடியவில்லை. அவன் செல்லப்பிள்ளை. எப்போதும் அவனிடம் காசு இருந்துவரும். எனக்கும் கொண்டாட்டந்தான். அம் பட்டப் பையன் தரும் தின்பண்டங்களை வாங்கிச்

சாப்பிடலாமா என்ற வேற்றுமைப் புத்தி எனக்கு அப்போது பாடமாகவில்லை. எனக்கும் அவனுக்கும் எந்தவிதத்தில் வித்தியாசம் என்பதே என்னால் புரிந்து கொள்ளமுடியாமலிருந்தது. ஆனால் என் பெற்றோரது உபதேசம் சிறிதுகூட பலன் தரவில்லை. அவர்களும் அலுத்துப்போய்ச் சும்மாயிருந்துவிட்டனர்.

எங்கள் சிநேகத்தைக்கண்டு பொறாமைகொண்டவர்களில் பிள்ளையார்கோவில் அர்ச்சகரும் ஒருவர். நாங்கள் இருவரும் உல்லாசமாகப் பொழுதுபோக்கும் இடம் அரசடிப்பிள்ளையார் கோவில்தான். மத்தியானவேளைகளில் அங்கு யாரும் வரமாட்டார்கள். ஒரு முறை நாங்கள் அங்கு உட்கார்ந்து அரட்டையடித்துக்கொண்டிருப்பதை அர்ச்சகர் கண்டுவிட்டார். அவர் கண்களில் தீப்பொறி பறந்தது. நான் நடுங்கிவிட்டேன். முத்தப்பன் மட்டும் அசையவில்லை. ஊர் அம்பலகாரரிடம் சொல்லி முத்தப்பனையும் அவன் தாயையும் ஊரைவிட்டு ஓட்டிவிடுவதாகப் பயமுறுத்தினர். ஆனால் அவரது உறுமல்கள் ஒன்றும் பலனளிக்கவில்லை. இப்போதெல்லாம் அவர் எங்களிடம் மிகுந்த அன்புடன் நடந்துவருகிறார். எங்கள் வழிக்கே வருகிறதில்லை. காரணம் என்ன தெரியுமா? ஒரு நாள் நாங்கள் கோவில் வெளிப்பிரகாரத்தில் தூங்கிக்கொண்டிருக்கிற சமயம் அவர் ஒரு வண்ணாக்குட்டியுடன் திருவிளையாடல் புரிந்துகொண்டிருந்ததை அகஸ்மாத்தாகப் பார்த்துவிட்டதுதான். அவர் எங்களையும் பார்த்துவிட்டார். அன்று அவர் எங்களிடம் நல்ல வார்த்தை சொல்லி

விஷயத்தை யாரிடமும் சொல்லி விடக்கூடாது என்று கேட்டுக்கொண்டார். அவருடைய கோபத்தி லிருந்து தப்ப இது ஒரு நல்ல சக்தியுள்ள பாணமாகி விட்டது எங்களுக்கு. அன்று முதல் அவர் எங்க ளுக்குப்பொரி, கடலை எல்லாம் தருவது வழக்கம். "நீ கோவிலுக்குள்ளே வந்தாலும், யார் கண்ணிலும் பட்டுவிடாதே" என்றுமட்டும் அவர் முத்தப்பனிடம் சொன்னார்.

முத்தப்பன் பாதிரியார் பள்ளிக்கூடத்தில் படித் தாலும், நல்ல முறையிலேயே ஒழுங்காகப்படித்து வந்தான். ஆனால் திடீரென்று அவன் தகப்பனார் இறந்துபோனபடியால் அவன் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு, தன் குலத்தொழிலை மேற் கொள்ளவேண்டியதாயிற்று.

தந்தை இறந்ததும், அவனுக்குச் சுதந்திர உணர்ச்சி அதிகரித்துவிட்டது. தன் தொழிலை அவன் வெறுக்கவில்லை. ஊராரின் அட்டகாசத்தை யும், உயர்குலம் என்ற இறுமாப்பையும், பாரம்பரை அடிமைத்தனம் என்ற உணர்ச்சியையும் அவனால் சகித்துக்கொள்ளமுடியவில்லை.

கோவிலூர் பத்து மைல் தூரத்தில் இருக்கும் நகரம். மின்சார விளக்கு, நகரசபை, சினிமா முதலிய நாகரீகச் சின்னங்கள் எல்லாம் அங்கு ஏற்பட்டுவிட் டன. முத்தப்பன் அடிக்கடி கோவிலூர் போய்வந்து அங்கு தான் கண்ட காட்சிகளை விசேஷமாக என்

ளிடம் வர்ணிப்பான். நான் சிறிதும் சலிப்புக்காட்டாமல் கேட்டுக்கொண்டிருப்பேன்.

டவுனில் டாக்டர்கள் கால்சட்டை தொப்பிகளுடன் காட்சியளிப்பதை அவன் கண்டு கொண்டதிலிருந்து அவனுக்கும் அப்படி உடையணிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டிருக்கவேண்டும். ஒரு நாள் அதிகாலை என் வீட்டுக் கொல்லைப்புறவாயிலில், துரைமாதிரி உடையணிந்து நின்ற முத்தப்பனைக் கண்டேன். அவன் சொன்னான், 'நானும் ஒரு டாக்டர்தானே? பரு, கொப்புளம், சிலந்திப்புண் முதலியவற்றிற்குப் பச்சிலைகளைக்கொண்டு சிகிச்சை செய்யும் முறையை எங்கப்பாவிடமிருந்து நானும் கற்றுக்கொண்டிருக்கிறேன். நான் ஏன் டாக்டர் மாதிரி கால்ச்சட்டை போடக்கூடாது?'' என்ற அவனுடைய கேள்விக்கு என்னால் மறுப்புச்சொல்ல முடியவில்லை. ''நீ சொல்வது ரொம்பசரி'' என்றுதான் சொல்லமுடிந்தது. இந்த பதில் அவனுக்கு அதிக ஊக்கத்தைக் கொடுத்திருக்கவேண்டும். அவன் அந்த உடையுடனேயே மேல்சாதிக்காரர் வீதிக்குள் புகுந்துவிட்டான். ஆற்றிலிருந்து வீடு நோக்கி வந்து கொண்டிருந்த நீலகண்ட சாஸ்திரிகள் இந்தக் கோலத்தைக் கண்டுவிட்டார். ''மேல்வேட்டி போடக்கூடாத அம்பட்டப் பயல், தொப்பியும் சட்டையும் அணிந்துகொண்டு தெருவுக்குள்ளே வரலாமா? ஒழுங்கா இருந்தால் போச்சு. இல்லே, தோலை உரித்து ஊரைவிட்டுத் துரத்திவிடுவேன்'' என்று பயமுறுத்தினர். தலைபிழைத்தது தம்பிரான் புண்ணி

யம் என்று முத்தப்பன் ஓடி மறைந்து விட்டான். இருந்தாலும், எல்லோரையும்போல தானும் ஏன் "சட்டைபோடக்கூடாது என்பதற்கு ஒரு காரணமும் அவனுக்கு விளங்கவில்லை. தானும் "ஒரு பண்டிதன்— டாக்டர்தானே? நான் போட்டிருக்கும் உடைகளோ சுத்தமானவை, (கோவில் பூசாரி சில சமயம் உடுத்தி யிருக்கும் எண்ணெய் ஸ்நானஞ்செய்த கருமேக வர் ணத் துண்டு அவன் அகக்கண்முன் காட்சியளித்தது) நான் ஏன் உடுத்தக்கூடாது? உடுத்தினுல் தூரத்துவா னேன்? நான் என்ன குற்றவாளியா?" என்று கேட் டுக்கொண்டான். அவனுக்கு ஒன்றும்புலப்படவில்லை.

நான் வீட்டுக்குள் போனபோது, அந்த அம் பட்டப் பையன்கூடச் சேரக்கூடாதென்று என் தாய் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தாள். அன்று பகல் முழு வதும் பள்ளிக்கூடத்தில் முத்தப்பனுடைய விஷ யத்தைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தேன். வீடு திரும்பும்போது வழியில் அவன் குடிசைக்குள் எட் டிப்பார்த்தேன். முத்தப்பனை அங்கு காணவில்லை.

முத்தப்பன் அடிக்கடி நகருக்குப்போய் வந் தான். அங்கு அவனுக்கு நல்ல வருமானம் கிடைப்ப தாயும், சட்டை போட்டுக் கொள்வதற்காக யாரும் தன்னைத்திட்டவில்லை என்றும், தூரத்தவில்லையென் றும் சொன்னுன். தான் ஒரு பிளான் போட்டிருப் பதாகச் சொன்னபோது, அவனுடைய தைரியத்தை

யும் புத்திசாலித்தனத்தையும் என்னால் பாராட்டாமலிருக்கமுடியவில்லை.

"இந்த வைதிகப்பித்துப்பிடித்த மனிதர்களுக்கு ஒரு சரியான பாடம் படிப்பிக்கவேண்டும். நான் இவர்களுக்கு இனி வேலைசெய்யப்போவதில்லை. அவர்கள் என்னவேண்டுமானாலும் செய்யட்டும். நான் இங்கிருந்தால்தானே? வேண்டுமானால் எனக்குத்தரக் கூடிய நெல்லை நிறுத்திக்கொள்வார்கள். டவுனில் எனக்குப்போதுமானபடி சம்பாதிக்க முடியும். பார்த்துக்கொள்ளலாம்" என்றான் முத்தப்பன். ஒரு "உயர் ஜாதிக்காரன்" என்று எண்ணிக்கொள்ளும் எனக்குக் கூட இவ்வளவு துணிச்சல் ஏற்படாதே என்று நான் எண்ணிக்கொண்டேன்.

சில தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் முத்தப்பன் ஒரு சைக்கிளை உருட்டிக்கொண்டு வந்தான். விஷயம் என்னவென்று விசாரணைசெய்ததில், தான் அதை இருபது ரூபாய்க்கு விலைக்கு வாங்கியிருப்பதாகச் சொல்லி, சைக்கிள் ஓட்டக்கற்றுக்கொள்ளும்படி என்னையும் அழைத்தான். எனக்கு அளவு கடந்த ஆனந்தம் ஏற்பட்டு விட்டது. இருவருமாக சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொண்டோம்.

முத்தப்பன், முன்பு நடந்துசென்றவன், இப்போது சைக்கிளேறி, ஊரார் முன்னிலையில் சவாரி செய்ய ஆரம்பித்தது வைதிகக் கூட்டத்தாருக்கு அதிக எரிச்சலை உண்டுபண்ணிவிட்டது என்று சொல்லத்தேவையில்லை. அவன் தினமும் கோவிலூர் சென்று தன்

தொழிலை வெற்றிகரமாக நடத்திப் பணம் சேர்த்து வந்தான். சைக்கிளின் உதவியால் அவன் தொழில் அங்கு நன்கு வளர்ந்துவந்தது. இங்கே கிராமத்தாரின் தாடி நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து வந்தது. ஊராருக்குப் பயந்து கிராம ஊழியத்தைச் சரிவரச்செய்யாவிட்டால் கோர்ட்டில் பிராது போட்டுவிடுவதாகச் சிலர் அவன் தாயாரிடம் போய் பயங்காட்டிப்பார்த்தார்கள். ஒன்றும் பயன் படாமற்போகவே, வெகுதூரத்திலிருந்து புதிதாக ஒரு அம்பட்டனை அழைத்து வந்து குடியேற்றினார்கள்.

முத்தப்பன் கிராமத்தாரின் உருட்டலுக்கோ, மிரட்டலுக்கோ சிறிதும் பயப்படவில்லை. அவன் போட்ட திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வந்தான். இப்போது அவன் கையில் நிறையப் பணம் சேர்ந்துவிட்டது.

டவுனில் ஒரு நல்ல கட்டிடத்தை வாடகைக்குப் பிடித்தான்; பக்கத்துக் கிராமத்திலுள்ள தனது நெருங்கிய உறவினர்களையெல்லாம் பங்காளிகளாகச் சேர்த்தான். "முத்தப்பவிலாஸ் ஸலூன்" என்று போர்டு போட்டுக்கொண்டான். அவன் தொழில் கௌரவமாகவும் லாபகரமாகவும் நடைபெற்று வருகிறது. வேறிடங்களிலும் அவனைப் பின்பற்றிப் பலர் ஸலூன்கள் வைக்க ஆரம்பித்தனர். இவ்வாறு நாடு முற்றும் ஏராளமான ஸலூன்கள் ஏற்பட்டுவிட்டன.

———

'வா! வா!' என்று அன்றைக்கு வரவேற்ற ஆழித்திரைகள் இன்று 'போ! போ!' என்று அவனைத் துரத்தின. 'மாயாவைப் பார்த்தாலல்லது இவ்விடம் விட்டுப் போவதில்லை' என்று திரைகளை எதிர்த்துச் சென்றான் மோகனன்.

## மாயா

---

எம். அஹமது பி.ஏ., பி.எல்.

"நீ முட்டாள்! விரட்டிக்கொண்டே வருகிறேன், அசையக்கூட பணிவு இல்லை. அப்படிக்கல்லவா உன் துணிவு?" என்று குனிந்தவன் நிமிர்ந்தான். அவன் கையிலிருந்து ஒரு கருங்கல் 'விர்' என்று பாய்ந்தது. நல்ல காலம்! குறி தவறிவிட்டது. இல்லாவிட்டால் அந்த மண்ணூர்ந்தையின் கதி அதோகதிதான்.

ஆந்தைமேல் மோகனனுக்கு அவ்வளவு கோபமா? அவன் மனதைத் தடவிப் பார்த்தால் விஷயம் தட்டும். மாயாவின் வீட்டை ஒட்டிய அப்பூந்தோட்

டத்திலே, சாயுங்காலம் வந்ததும் வழக்கமாக அவன் எழுந்து அவனுக்குச் சாயல் காட்டும் கோயிலல்லவா அது? காதல் தோய்ந்த மதிலிலே ஆந்தை வந்திருந்தால்!

செங்கற் சுவரில்ப்பட்டு ஆந்தை வீற்றிருந்த இடத்திலிருந்து ஒரு பகுதி கீழே இடிந்து வீழ்ந்த தல்லாமல்? மோகனனுக்கு எழுந்த கோபம் அப்பறவையை யாதும் செய்யவில்லை.

மாயா அங்கு வருவாள். வந்தவள் சிவந்த தன் கரங்களால் சுவருக்கு மேலே வரம்பு கூட்டுவாள். அவ்வரம்புக்கு மேலே தங்கம் போன்ற தன் முகத்தை வைத்துக் கும்பம் காட்டுவாள். அப்போதெல்லாம் மோகனன் நினைப்பான், 'ஆகா! அந்த மதிலிலே ஒரு பகுதி தகர்ந்து விழுந்தால் அவளுடைய எழிலில் ஒரு சிறிது கூடுதல் காண்பேனே!' என்று. இப்போது அச்சுவர் அமிதமாகவே இடிந்து வீழ்ந்தும் தோட்டத்தில் உடைந்து கிடந்த சட்டி பானைகளையே எட்டிப்பார்க்க நேர்ந்தமையால் அவன் மனம் என்ன பாடுபட்டிருக்கும்!

துன்பத்தை நினைப்புத் தோட்டத்திலே மேய விட்டு அமைதித் தொழுவத்திற்கு விரட்டி வரலாம் என்று வீட்டுக்கு விரைந்தான் மோகனன். வாசற்படியில் காலை வைத்ததும் நாலுகட்டினுள்ளே மனைவி நிற்கக்கண்டு "மாயா! மாயா!" என்று கூவினான்.

"மாயா எங்கே மறைந்தாள்?" என மயங்கி நின்ற மோகனன் கேட்ட கேள்விக்கு "மாயா எப்படி வருவாள் மகனே? அவள்தான் மீளா உலகுக்குப் போய்விட்டாளே! என்று அவன் தாயின் குரல் சோகத்தில் மிதந்து பதிலாக வந்தது. அதோடு இரவும் வந்தது.

அந்த இரவு முன்பு அவனுக்கு அதுபோல— அடிக்கடி ஏற்பட்டுள்ளதுபோல பாழும் ஓர் இரவாய் முடிந்தது. முந்திய வருஷம் இதே தேதி, இதே நேரத்திலே தன் குடும்பத்துடன் கன்னியாகுமரிக்கு உல்லாச யாத்திரை போக யத்தனித்துத் தானும் தன் மனைவி மாயாவும் ஆயத்தம் செய்து காதல் நினைவிலே அவன் என்றைக்குமே இல்லாத இன்பத்தில் ஆழ்ந்திருந்தான்.

II

பொழுது புலர்ந்ததும் மோகனன் கன்னியா குமரி கடற்கரையில் காணப்பட்டான். இப்போது அவனுடன் மனைவியுமில்லை. மற்றுமுள்ள உறவினரு மில்லை. தனிமையாக அங்கே வந்த காரணம் வந்த பின்புதான் அவனுக்குத் தெரியும். முன்பு தங்கியிருந்த பங்களாவின் வராந்தாவில் போய் குந்தியிருந்தான் அவன். 'பாழ்' என்ற பரதேவதை அங்கே நின்றாளே ஒழிய காகம்கூட அத்திக்கு எட்டிப்பார்க்கவில்லை.

கழிந்த ஆண்டு அங்கே எவ்வளவு கலகலப்பு, மாயா எங்கே? குடும்பக் குழந்தைகளுடைய எக்களிப்பு எங்கே? மோகனனின் மனக்களிப்பு எங்கே?

கடற்பூண்டுகள் நிறைந்த அந்த மணற்குன்றில் மாயா வேடிக்கையாக மறைந்துகொள்ள, அவளைக் கண்டுபிடிக்க மோகனனுக்கு வழிகாட்டிய ஓடுங்கி நீண்ட அவளது கால்தடங்களில் ஒன்றுகூட, தன் இரண்டு கண்கள் ஒன்றில் அகப்படாதா என்று திரை வரம்பக்குத் தாழ்ந்து, மெல்லஇறுகி, நிரைத்து நிரைத்துக் கிடந்த கருமண் கலந்த அந்த மணல் பாதையில் மோகனன் நடக்கவும் நடந்தான் என்றால் அவனது அறிவுத் திறன் குன்றியதற்குப் பொறுப்பு மாயா ஏற்றுத்தான் ஆகவேண்டும்.

'மாயாவைக் கண்டது யார்? அவளது காலடியைக் கண்டது யார்?' என்பன போன்று அருகிலுள்ள தோப்புகளும், கண்கொள்ளப்படாமல் கிடந்த மணற் கூட்டங்களும், விட்டுவிட்டு நின்ற கட்டிடங்களும், அவளை எங்கோ ஒளித்து வைத்து மௌனம் சாதித்தன.

'வா! வா!' என்று அன்றைக்கு வரவேற்ற ஆழித் திரைகள் இன்று 'போ! போ!' என்று அவனைத் துரத்தின. 'மாயாவைப் பார்த்தாலல்லது இவிடம் விட்டுப் போவதில்லை' என்று திரைகளை எதிர்த்துச் சென்றான் மோகனன். கடலின் மேல் தொலையில் சென்று கொண்டிருந்த கப்பலில் எழும்பிய புகையைக்கண்டு "வந்த வழியின் அழகைக் காண, சென்ற வருஷம் சென்ற நீ, இப்போது கப்பலைப் பிரிந்து வானத்தில் மாயமாகாமல் போகக்காரணம் என்ன?" என்று

கேட்டான். அப்போது உக்கிரத்துடன் எழுந்த ஓர் அலை அவனை அடித்துக் கீழே தள்ளிற்று. கழிந்த வருஷம் மாயா அவனுடன் அணைந்து வந்துகொண் டிருந்ததால், இதேபோல் அவன் கீழே தள்ளப்பட்டி ருந்த ஓர் விபத்தை அவள் கரங்கள் தடுத்த சம்ப வம் ஞாபகத்துக்கு வர அவனுக்குக் கண்ணீர் வந் துவிட்டது. அடுத்தாற்போல் பாய்ந்த திரை அக்கண் ணீரை அடித்துக்கொண்டு போய்விட்டது.

"அடைக்கலக் கடலே! இரக்கமுள்ள மோகனனை இப்படி ஏன் வருத்தினாய்? மாயாவைக் காட்டத்தான் உனக்குமனம் இளகவில்லை! அவள் அழுதகண்ணீரைப் பார்க்க அவனுக்கு உரிமை கிடையாதா? அடித்து அவனைத் துரத்தினாய்! ஏதோ அந்தமாமரம் அவ னுக்குக் கொடுக்கும் அடைக்கலத்தைப் பார்! துளிக் குப்பதிலாகக் கண்ணீரை அருவியாகப் பெருக்க அவனுக்கு அது அவகாசம் தருகிறதே! நேரம் நீண் டால் அந்த அருவி பிரளயமாய் உருவெடுத்து உனது மண் கரையைக் கரைத்து உனது கட்டையே அவிழ்த் துவிடப்போகிறதே!"

ஊனையும், உயிரையும் உருக்கி மறைந்துபோன மாயாவுடன் உறைந்து விடலாமென மோகனன் இருக்கையில், அவனை யாரோ பின்னாலிருந்து வாரி எடுப்பதாக அவன் உணர்ந்தான்.

## III

'நீ இங்கே வந்திருப்பாய் என்று எனக்குத் தெரியும்'

"எப்படித் தெரியும்?"

"இது மாயாவோடு நீ விளையாடிக்கொண்டிருந்த இடமல்லவா?"

"ஆம் அப்பா! இருவரும் கிச்சுக்கிச்சுத் தம்பலம் விளையாடிக் கொண்டிருந்தோம். நீ அப்போது எங்களைக் கண்டிக்கவில்லையா?"

"மாயா இவ்வளவு சீக்கிரத்தில் போய்விடுவாள் என்பது தெரியுமா?" என்றுபதிலிறுத்தபோதுதான், தந்தையாகிய அவர் முதற்றடவையாகத் தன் பொருட்டுக் கண்ணீர் விட்டதைக் கண்டான் மோகனன்.

"சற்று இங்கே இருந்துவிட்டுத்தான் வீட்டுக்கு வருவேன்."

"மனம்போல இரு. நானும் கூட இருக்கிறேன்" என்று தான் கொண்டுவந்த கனிகளை கோபிநாதர் வற்புறுத்தி மோகனனுக்குக் கொடுத்தார். அவற்றை அவன் அருந்தி விட்டு அந்த மாமரத்தின் நிழலில் படுத்தது தான் தெரியும்.

"மோகனா எழுந்திரு! மோகனா எழுந்திரு!" என்ற குரல் அவன் நித்திரையை அடித்து விரட்டியது.

## IV

மகனுடைய விதியை நினைந்து மயங்கியிருந்த கோபிநாதர், கடற்காற்று மண்ணின் மேலே கிடந்த சிப்பிகளை மூடுவதும், மண்ணுக்குள்ளே கிடந்த சிப்பிகளைத் திறப்பதுமாகத் தன் திருவிளையாடல்களைக்

காட்டிக்கொண்டிருந்ததை நோக்கி இருக்கையில் வைர மோதிரம் ஒன்றை அக்காற்று வெளியே ஊளப்பி சூரிய ஒளியிலே அதை ஒளிரச் செய்தது.

மோகனன் மெய்மறந்து நின்றான். உடன் தானே வீட்டுக்குப் போய் அதை எல்லோரிடத்திலும் காட்டடவேண்டும் என்று கோபிநாதர் நில்லாத நிலை நின்றார்.

கழிந்த வருஷம் மாயாவின் விரலிலிருந்து அம் மோதிரம் கழன்று விழுந்தது. மோகனனும், அங்கு வந்திருந்த மற்றவரும் எங்கும் தேடினர். தேட வேண்டா இடங்களிலும் தேடினர். கண்ணுக்கு எட்டாமல்ப் போய் அம்மோதிரம் ஓர் குடியைக் கெடுத்து அக்குடியை வேற்றாருக்குத் தூக்கிவிட்டது.

மாயா மணப்பெண்ணாக இருந்தபோது விவாகத்துக்கு வந்த விருந்தினரில் ஒரு தனிகரின் மனைவி மணப்பெண்ணுக்கு அழகுகூட்ட அணிவித்த மோதிரம், விவாகம் கழிந்து இரண்டு மாசங்கள் வரை அவள் விரலில்க்கிடந்துவந்து, குமரி யாத்திரை முடிவடைந்ததும் உரியவளிடம் ஒப்படைக்கலாமென மெத்தனப்பட்டுக் கிடந்த அம்மோதிரம், மாயாவுக்கும் அவள் பெற்றோர்க்கும் அவ்விதம் மோசம் செய்யுமென்று யாரும் நினைத்ததேயில்லை.

மாயாவின் கல்யாணத்துக்கென தனது சொத்தில் ஒரு பகுதியை விற்று அவள் தகப்பனார், மோதி

ரத்தின் அடக்க விலையாகிய ஐயாயிர ரூபாயையும் உரியவருக்குக் கொடுத்துத் தீர்க்க, வீட்டைத் தவிர மற்ற சம்பாத்யத்தை எண்ணி மாயா தன்னை நொந்து நொந்து நோய்வாய்ப்பட்டு முடிவில் உயிரையும் விட்டாள்.

மோகனன் மடிமீது மாயா தலையை வைத்து மரிக்கும்போது, "தங்கை லீலா இருக்கிறாள். அவளைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று அவள் புகன்ற வார்த்தைகளின் பிரகாரம் லீலாவை மணந்துகொள்ள மோகனின் பெற்றோர்கள் அவனுக்கு இடையூறாய் இருந்தனர். அதனால் மாயா வளர்த்த சோகமே அதிகரித்தது. இப்போது அவற்றிற்குப் பரிகாரம் ஏற்பட்டிருப்பதை மோகனன் உணர்ந்து மனப்பூரிப்பால் மௌனம் கொண்டான்.

பொழுது சாய்ந்தது. மோகனன் அவ்வளவு நேரம்வரை தந்தையைத் தன்னுடன் இருத்தி வைத்திருந்தான்.

## V

கடலுக்கு நிலக்கனிவு வர வர அதிகரித்தது. "பாவம்! அந்த மனிதர் இந்த மோதிரத்தால், அருமையான மாயாவைத் தூக்கி யமனுக்குக் கொடுத்துவிட்டு மனைவியை ஒரு கையிலும், குழந்தை லீலாவை மற்றக் கையிலும் பிடித்துக்கொண்டு திருநெல்வேலிக்குப் போய்விட்டார். ஒருசமயம் பெரிய வர்த்தகராய் விளங்கி, உள்ளூரில் கெட்ட குடியாக வாழ

அவர் மனம் ஒருப்படவில்லை" என்ற கோபிநாதர், "மோதிரம் கிடைக்கப்பெற்ருல் சொந்த ஊருக்குத் திரும்பவந்து அவர் சந்தோஷமாக வாழ்வாரல்லவா? நீ சொல்லி வந்ததுபோல் உனக்கும் லீலாவைக் கல்யாணம் செய்து கொள்ளலாமல்லவா?" எனவும் மோகனனிடம் சொன்னுர். அப்போதுதான் ஒன்பது மாதங்களுக்குப் பின் மோகனனிடம் அரும்பிய சிரிப்பைப் பார்த்தார் கோபிநாதர்.

மாலை மணி ஏழு. அப்போதுதான் இருவரும் குமரிமுனையைவிட்டு தங்கள் நாகர்சோவில் நகருக்குப் புறப்பட்டனர்.

மோகனனுடைய பிரிவைச் சகியாத அலைகடல் ஒன்றன்பின் ஒன்ருகத் தன் திரைகளை தூது விட்டு, அவனை அழைத்துவர ஏவிக்கொண்டிருந்தது. நினைத்தது கூடாது போகவே, "அடுத்த கடவை நீ வருமளவும் உன்னைத்தேடிப் புலம்பிக் கொண்டிருப்பேன்" என்று அது பிடிவாதம் கொண்டது.

வரும் வழியில் தந்தையுடன் சர்க்கரைக் குளத்திலிறங்கினுன் மோகனன். அக்குழத்தில் மூழ்கி, மாயாவுடன் முகங்கழுவப்பெற்ற தண்ணீர் ஆவியாக மாறி ஆகாயத்தில் சஞ்சரித்து மீண்டும் நீராகத் திரிந்து புத்தேரிக் குளத்திலேயே போய் வீழ்ந்து கிடந்தும் பழைய தண்ணீர் அக்குளத்தில் நிலைத்திருப்பதாக எண்ணினுன் மோகனன். வழி நெடுக நின்ற மரங்கள் பச்சை இலைகளையும்பழுத்த இலைகளையும்கொண்ட

பூர்வநிலையிலேயே நின்றன. கொட்[illegible]ம்ளையடுத்த நெற்பயிர்கள் முன் வருஷத்தைவிட இவ்வருஷத்தில் கொஞ்சமேனும் மாற்றம் பெற்றிருக்கவேண்டுமே? இப்படிப்பட்டதற்கெல்லாம் மாயா விட்டகன்ற தவிசிலே லீலா கொலுவேறிக் கொண்டிருந்ததே காரணம்.

லீலாவைக் கல்யாணம் செய்தபின்புகூட அப்புத்துணர்ச்சி மோகனை விட்டு அகன்றபாடில்லை. பின்பு ஒருநாள், முன்புபோல தன் குடும்பத்துடன் கன்னியாகுமரிக்கு வரும் வழியிலே, இடையில் மருத்துவாமலையில் தங்கியபோது, வெயிலென்றும்பாராது அம்மலையின் உச்சியில், அவ்வுச்சி வேளையில் ஏறி நின்றுகொண்டு லீலாவை இடது கையில் பிடித்தவாறும் வலது கையில் புருவத்துக்கு மேலே ஆகாயத்தை மறைத்தவாறும் சஞ்சீவி பர்வதம் தெரிகிறதா? அதிலேனும் சிரஞ்சீவி மாயாத் தென்படுகிறாளா என்று அவன் நெடுநேரம் நோட்டமிட்டு நின்றான்.

---

*அடித்த அந்த சமயந்தான் அந்த வலி. ஆனால் அவர் நிலத்தைக் கட்டாயம் விற்கவேண்டுமென பிடிவாதம் செய்ததையும், அதன் விளைவாக அவனுடைய பெற்றோர்களை ஏளனமாகப் பேசினதையும் நினைக்க நினைக்க அவனுக்குத் தாங்கவொண்ணாததாக இருந்தன.*

# ஒன்றரை ஏக்கர் நிலம்

ரா. வெங்கடாசலம்

"அதில் உனக்கு என்ன வரும்படி வருகிறது? போயும் போயும் ஒரு வருஷத்திலே இருபது ரூபாய் காசாவது மிஞ்சுகிறதா? உரத்துக்குக் கொடுக்கவும், உழவுக்குக் கொடுக்கவும் கடைசியாய்ச் சர்க்காருக்குத் தீர்வையைக் கொடுக்கவும் சரியாய்ப் போய்விடுகிறது. "ஏன் மாரி? நான் சொல்வதைக் கேள். அந்த நிலத்துக்கு இப்ப நல்ல விலை. வித்துப்புட்டு இங்கே டவுனிலே நல்ல வீடாய் வாங்கிப் போட்டுவிட்டால் மாதாமாதம் வாடகையை வாங்கி வரலாம்."

"உம், நிலத்தை விற்கிற பேச்சை இன்னொரு தடவை மட்டும் பேசவேண்டாம். அதிலே ஒன்றுமே வராட்டினுக்கூடப் பரவாயில்லை. அப்பா வாங்கிக்

கொடுத்தது. இத்தனை காலமாய் எதோ கஞ்சி வாத்துட்டு வருகிறதே, எனக்கூட விசுவாசம் வேண்டாமா?"

கோபால்சாமி செட்டியாருக்கு ஆத்திரம் மீறுகிறது. தான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கொஞ்சமும் மதியாமல் இப்படி உதாசினம் செய்து ஒரே பிடிவாதமாயிருப்பதில் மிகவும் கோபம்.

மாரியாயிக்கு அவளுடைய தகப்பனார் அவள் பெயருக்கே ஸ்ரீதனமாக ஒன்றரை ஏக்கர் நஞ்சை நிலம் வாங்கிவிட்டது. 15 வருஷமாக அதை அவர்கள் அனுபவித்து வந்தனர். ஆனால் அந்த நிலக் கிரயத்தின் மதிப்புக்கு வட்டிபோட்டுப் பார்த்ததில் மிகவும் ஈனமாக இருந்தபடியால் கோபால்சாமி செட்டியாருக்கு அதை விற்று விட்டு வட்டி கட்டக்கூடியதாகப் பார்த்து ஒரு சொத்து வாங்கிவிட வேண்டுமென ஆசை. அந்த ஆசை இப்போதுதான் அவருக்குக் கைகூடும் சமயம் வந்ததென எண்ணினார். 1000 ரூபாய் ஆனாலும் கொடுத்துவிடலாமென நினைத்தார். திடீரென இருவர் போட்டியில் 1500 வரை உயர்ந்துவிட்டது.

கோபால்சாமி செட்டியார் விலை திகைத்துவிட்டு மனைவியைச் சம்மதிக்கச் செய்ய வந்துகொண்டிருந்தார். ஒற்றையடிப் பாதை. செட்டியார் வருகிற பாதை இதுவெனக்கூட சரியாய்க்கவனிக்காமல் தன் சிந்தனையை நிலக்கிரய விஷயத்திலேயே செலுத்

திக்கொண்டிருந்தார். "ஊனை கிரயம் முடிந்துவிடும். 1500 ரூபாய்க்கும் பெரிய வீடாய் வாங்கி, வாடகைக்கு விட்டால், உம், 20 ரூபாய் மாதாமாதம் கறந்துவிடலாம். இதை விட்டுவிட்டு அந்து, காஞ்சு, கறைஞ்சபோன நிலத்தைக் கட்டியழுதுகொண்டு ......நமக்கு இது நல்ல காலம்தான். ஆமாம், உடனே விற்றுவிடவேண்டும். தாமதம் செய்தால் விலை கேட்டவன் சாக்கில் ஏதாவது பின்வலித்துவிட்டால் என்ன செய்வது?"

செட்டியார் இவ்விதம் பலவாறாக நினைத்துக் கொண்டு துரிதமாய் வந்தார். பூரிப்புடனும் உற்சாகமுடனும்தான் அவர் வீட்டினுள் நுழைந்தார். அங்கவஸ்திரத்தை இரண்டு பக்கமும் சரியாகத் தொங்க விட்டுக்கொண்டு ஒரு கனைப்புக் கனைத்தார். "அடி மாரி!' என்று வெங்கலமணிஓசைபோல் அழைத்தார்.

அச்சமயம், உள்ளே சமையல் அறையில் 'டப்' எனும் சப்தம் கேட்டது. மாரி பதார்த்தம் சமைக்க வேண்டி தேங்காயை உடைத்தாள். உடைந்த சப்தம் அது. "உம், என்னுங்க!" மாரி உட்கார்ந்தபடியே திரும்பி எட்டிப் பார்த்தாள்.

செட்டியார் உற்சாகமாக வந்த விஷயத்தைச் சொன்னார். மாரி தேங்காய்ப்பூ திருகியதையும் அப்படியே போட்டுவிட்டு எழுந்தாள்.

"அந்தப் பேச்சை எடாதிங்க" என ஆரம்பித்தாள். செட்டியாருக்குத் தூக்கி வாரிப்போட்டது.

அவருடைய கனவு, கற்பனையை அவள், தேங்காயை உடைத்ததுபோல உடைத்துவிட்டாள். எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். மாரி ஒரே பிடிவாதமாக நிலத்தை விற்கக் கூடாதெனச் சொன்னாள்.

இதனால் மாரிக்கு இரண்டு உதை. செட்டியார், கொடியில் கிடந்த துண்டை உதறி மேலே போட்டுக்கொண்டு வெளியேறி விட்டார்.

"ஒரு பெண்ணுக்கு அவ்வளவு தெம்பா?"

அடுப்பில், இரும்புச் சட்டியில் எண்ணெய் ஊற்றினபடியே இருந்தது. கவிழ்த்திய பானையை நிமிர்க்கவில்லை. அடுப்பில் எரிந்த தீ, விறகைப் பற்றிக் கொண்டே வந்து வெளியே எரிந்துகொண்டிருந்தது.

மாரி உதை வாங்கிக்கொண்டு உட்கார்ந்த இடத்திலேயே இன்னும் இருந்தாள். செட்டியார் வெளியேறி வெகுநேரம் ஆகியும் இன்னும் மாரி தன் அழுகையை விடவில்லை. முதன் முதலில் புருஷனை வாய் விட்டு ஏசி அழுதாள். இப்போது தேம்புவதிலேயும் சளியைச் சிந்திவிட்டெறிவதிலேயும் இருந்தாள்.

செட்டியார் உதைத்தாரே, அந்த உதையின் வேதனைகூட அவளுக்கு பிரமாதமாக இல்லை. அடித்த அந்த சாயர்தான் அந்த வலி. ஆனால் அவர் நிலத்தைக் கட்டாயம் விற்கவேண்டுமெனப் பிடிவாதம் செய்ததையும், அதன் விளைவாக அவளுடைய பெற்றோர்களை ஏளனமாகப் பேசியதையும் நினைக்க நினைக்க அவளுக்குத் தாங்கவொண்ணாததாக இருந்தன.

"அவுக கொடுத்த அன்னத்தைத் தின்றுகொண்டே அவுகளை இப்படிப் பேசினு நல்லதுக்கா? ஒருக்காலும் விளக்கவே மாட்டா!" என அவள் புருஷனைச் சபித்துக்கொண்டிருந்தாள்.

அடுப்பிலிருந்த தீ விறகு முழுவதும் கரிந்து போனவுடன், அதுவும் அணைந்துவிட்டது. மாரியும் நேரம் செல்லச்செல்ல செட்டியார் ஏசிய ஏச்சைக்கூட மறந்துவிட்டாள். ஆனால் அந்த ஒன்றரை ஏக்கர் நிலத்தை விற்கிற விஷயம் பாவம் அவளைவிடவில்லை. இடியும் மின்னலும் போய்விட்டாலும் புயல் விடவில்லையே!

"இந்த ஒன்றரை ஏக்கர் நிலத்தையும் விற்க வேண்டுமென இவ்வளவு ஆத்திரம் ஏன்? ஏதோ! அப்பா அம்மா கொடுத்தவைகளில் பணம் காசு நகைகள் எல்லாம் போயே போய் விட்டன. இந்த மண்ணுதானே மிச்சம். இதைக்கூட நான் உயிருடன் இருக்கும்வரை வைத்து அனுபவிக்கக் கூடாதா?" என மாரியின் சிந்தனையில் அலைபுரண்டது.

"இதுக்காக இப்படிக் கோபித்துப் போய்விட்டாரே, ஐயோ அடுப்பில் வைத்தவை"

மாரிக்கு அப்போதுதான் அடுப்படி ஞாபகம் வந்தது. சமையலறைக்குள் சென்றாள். அணைந்த விறகைத் திரும்பவும் தியிட்டு, விட்டுப்போன வேலையைத் தொடர்ந்தாள்.

"கோபித்துட்டு எந்தப் பக்கம் போனுரோ? அவன் சோமுகூட இல்லையே. இருந்தாலாச்சும் போய்த் தேடிவரச்சொல்லலாம். உம், அவர் நிலத்தை விற்கத்தான்வேண்டுமென்கிறுர். அதை அவர் விற்ற திஞல் என்ன லாபம்? அவர் வெளியே போய் நாலு இடம் பார்த்து பேசி வருகிறவர்; நாலு விஷயமும் தெரிந்தவர்; இந்த நிலத்தை விற்ருல் அதைக்கொண்டு இங்கேயே வரும்படி வருகிறுப்போலே ஒரு சொத்து வாங்கிவிடலாம். இது நல்ல விலை என்பதிஞல்தானே அவர் இவ்வளவு பாடுபடுகிறுர்! அந்த நிலத்தை விற்றவிட்டால் அந்தப் பணத்தை வாயால் விழுங்கி விடுவதில்லையே! அப்பா வாங்கிக்கொடுத்த சொத்தே என்ருலும் அதை விற்று வேறு சொத்து வாங்கி விட்டால் அதுவும் அவர்கள் வாங்கிக்கொடுத்தது மாதிரிதானே! இது தெரியாமே வீணே கன்னு பின்னுனு கத்தி அவுகளேயும் சாப்பிடாமே வெரட்டி யாச்சு, வரட்டும்" இவ்விதமாக மாரி யோசனை செய்து முடிவுசெய்துகொண்டாள்.

தாளிக்கவேண்டியவைகளை இரும்புச் சட்டியில் போட்டு கரண்டியால் கிண்டிவிட்டாள். அப்போது சுவரின் மேல் ஒட்டியிருந்த ஒரு பல்லி கீழே விழுந்தது. அடுப்புக்கு மேல், மாரி அதைப் பார்த்தவள் திரும்பவும் நன்ருய் உட்கார்ந்துகொண்டாள். அந்தப் பல்லியை இமை கொட்டாமல் பார்த்தாள்.

2

மாரியாயியுடைய தகப்பனும் தாயாரும் இறந்து வெகு நாளாகிவிட்டன. அவர்கள் இருக்கிறபோது

மாரியாயி தன்னுடைய நிலத்தைப் பார்க்கச் சென்றிருந்தாள். அவளை அவளுடைய தகப்பனார் அழைத்துப்போயிருந்தார்.

நிலத்தின் வரப்பின்மேல் அவர்கள் நடந்து பார்வையிட்டபோது வெள்ளையன் அவர்களுக்கு நிலத்தைச் சுற்றிக் காட்டினான். "அந்தோ—அந்த வரப்பிலே இருந்து இந்தப் பக்கம் ஒரு கல் நட்டிருக்கே, அது வரைக்கும் நம்ம நிலம்" என வெள்ளையன் காட்டினான்.

"மாரி, பாத்துக்கத்தா உன் நிலத்தை" என அவளுடைய தந்தை மிகவும் பூரிப்புடன் சொன்னார்.

மாரியோ அந்த வார்த்தைகளைக் கேட்டு வாய் பேசவும் முடியாமல் ஒரு புன்சிரிப்பிலேயே தன் ஆனந்தத்தையும், திருப்தியையும் தெரிவித்தாள். அந்தச் சமயம் அந்த நிலத்திற்குக் கிழக்கே ஒரு மூலையில் நின்ற கருவேல மரத்தில் கௌளியின் 'தெக் தெக்'கெனும் சப்தம் கேட்டது.

"அம்மா! உங்களுக்கு நல்ல அதிர்ஷ்டம்மா! ஐயா சொல்லவும் எங்க அய்யனார் சாமியும் உத்திரவு கொடுத்திட்டாரு" என வெள்ளையன் சொன்னான்.

மாரி சுவரிலிருந்து விழுந்த பல்லியைப் பார்க்கவும் 15 வருஷத்திற்கு முந்திய சம்பவம் ஞாபகத்திற்கு வந்தது. இப்போதுதான் நடக்கிறதை அவள் அநுபவிப்பதாக உணர்ந்தாள்.

வெள்ளையன் நிலத்தின் விஸ்தீரணத்தைக் காட்டியதும் அவளுடைய தந்தை "மாரி பார்த்துக்கத்தா

உன் நிலத்தை என்றதும் பல்லி சப்தித்ததையும் மறுபடியும் அவள் நினைத்தாள்.

"உங்களுக்கு நல்ல அதிர்ஷ்டமம்மா!" என வெள்ளையன் சொன்னதும் கொஞ்சம் நேரத்திற்கு முன் தான் கூறியதுபோல் அவளுக்கு இருந்தது. "உன் நிலம்" "அது என் நிலம். நான் விற்கவா? என் தந்தை எனக்குக் கொடுத்தது. அவர் என்னை அழைத்து அந்தவரப்பின்மேல் நின்றுகொண்டு காட்டிய அந்த நிலம், அய்யனுர் உத்தரவு தந்த நிலம். அதை நான் விற்கவா? அதை விற்பதால் அதிலும் பெரிய சொத்து கிடைக்கலாம். பணம் கூட அடையலாம். ஆனல் என் அப்பா வரப்பின் மேலிருந்து காட்டிய அந்த நிலம் கிடைக்குமா? அந்த வெள்ளையனைப் பெறமுடியுமா? தை மாதம் நெருங்கிக்கொண்டிருக்கிறபோதே பூசணிப்பழத்துடன் விடிவதற்குள் வந்து "அம்மா" என அன்புடன் அழைக்கும் அந்த வயோதிக உருவத்தைப் பெறமுடியுமா? முடியாது. வேறு எந்தப் பாக்கியம் கிடைத்தாலும் நான் அந்த நிலத்தை விற்கவேமாட்டேன். அவர் காலில் விழுந்தாவது கெஞ்சுகிறேன்" மாரியாயின் தீர்மானம் இவ்விதமாக மாறிவிட்டது. இதில் மிகவும் உறுதியாக அவள் இருந்தாள் என்றாலும்,புருஷன் அதற்காக கோபித்துவெளியேறியதை நினைக்க கொஞ்சம் சபலமும் தட்டியது.

செட்டியார் இன்னும் திரும்பி வரவில்லை. பகலும் கடந்து இரவும் வந்துவிட்டது. மாரியும் இன்னும்

அன்னம் தண்ணீர்கூட இல்லாமல் ஏங்கி இருந்தாள். வீட்டின் நிலையருகே நின்று கொண்டே கண்ணில் தென்படுபவர்களிடமெல்லாம் செட்டியாரைப் பற்றி விசாரித்தாள். பயனில்லை. இதனால் மாரி பெரிதும் விசனம் பூண்டு வாடிவிட்டாள்.

அவள் ஏக்கத்தைத் தீர்க்க ஒருவன் தோன்றினான். "ஐயோ என்ன அன்னி! பாவம், அண்ணன் 'கோ' என அழுதுகிட்டு எங்க திண்ணையில் கிடக்கிறாரு; கொஞ்சம் சாப்பிடுங்களென எவ்வளவோ சொன்னாலும் கேட்கிறாரில்லை" என அவன் சொன்னான்.

மாரிக்கு தூக்கி வாரிப் போட்டாற்போலிருந்தது. வீட்டுக் கதவை பூட்டிவிட்டு வேகமாக வந்தாள். செட்டியாரை எழுந்துவரும்படி கெஞ்சினாள்

"ஒரு பொம்பளையினாலே ஆம்பளே பேசின பேச்சு வீணாப் போறதா? நீ போ. உன் நிலத்திலேயே குடியிரு. போ. என்னை மட்டும் கூப்பிடாதே.' என்றார்.

மாரியின் மனம் கொந்தளித்தது. ஏன் ஜனனம் எடுத்தோம் என்று அவளுக்குத் தோன்றியது. கணவனைத் திருப்தி செய்வதா? அல்லது பீதியை ஏற்பதா? அந்த நிலத்திலே தனக்கிருக்கும் அவ்வளவு அவாவையும் அவர் அறிந்துகொள்ள முடியவில்லையே! எப்படியிருந்தாலும் அவர் திருப்தி அடைய வேண்டும். நம்மவர் நம்முள்ளத்திலேயே சாகட்டும். அவருடைய ஆசைக்கு இணங்குவோம் என நினைத்தாள்.

சப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் கிரயப் பத்திரம் பதிவானது. மாரி கையெழுத்திட்டாள். அதுவரை அவளுடைய மனம் எத்தனையோ தடவை மாறி மாறி இருக்கும். அவளுடைய தந்தையும், வெள்ளையனும், வரப்பும், கல்தூணும், வேல மரமும், சிறு செடிகளும் நாத்துகளும் அவள் முன் வந்திருக்கும்' கடைசியாக கையெழுத்துப் போடும்போதும் அந்தக் குழப்பம்தான்.

கோபால்சாமி செட்டியாரிடம் மாரி கிரய ரூபாய்களைக் கொடுத்தாள். அப்போது கௌளி கத்தியது. மாரியின் மனம் திடுக்கிட்டது. அந்த வெள்ளையன் ஞாபகம் வந்தது. "அம்மா! உங்களுக்கு இனி அதிர்ஷ்டந்தான்" எனச்சொல்ல அந்த வெள்ளையன் இல்லையே என அவள் மனம் ஏங்கியது. கண்களில் நீர்த்துளிகள் சிந்தின.

"ஏன்மாரி? பைத்தியக்காரியாட்டம் அழலாமா? கண்ணீரைத் தொடை" என கோபால்சாமி செட்டியார் தேறுதல் சொன்னார்.

"ஒன்றுமில்லை" என மாரி மொழிந்தாள்'

"பின் கண் கலங்கலாமா? முதன் முதலாய்ப் பணம் வாங்கிட்டுப்போகையிலே" என்றார்.

"உம், ஒன்றுமில்லை. அடுத்தாப்புலே தை புறக்கவும் நம் வெள்ளையன் வந்து "அம்மா! நெல் வண்டி வந்துருக்குங்க" எனச் சொல்லக் கேட்கப் போகிறேனு எனத்தான் துக்கம்" என்றாள்.

கண்ணீரோ மளமளவெனக் கொட்டியது.

"அன்று மறுத்தாயே! இன்று எனது மனைவியும் ஒரு குழந்தையின் தாயுமாய் விட்டாய் பார்த்தாயா? வெற்றி பெற்றது யார்? நீயா நானா?" என்று திரை மறைவிலிருந்து தனேஸ்வரன் தாழ்ந்த குரலில் கூறுவதுபோன்று அவளுக்குக் கேட்டது.

## கலையின் சக்தி

பி. ஜே. தாஸ் பி.ஏ.

"இன்று இரவு சில இறுதி வேலைகள். பின்பு படம் உருப்பெற்றுவிடும்; உயிர்பெற்றுவிடும்." இவ்வாறு கூறியவண்ணம் தனேஸ்வரன் படத்தை நன்றாகப் பார்க்கிறான். தனது கரங்களில் படத்தை ஏந்திக்கொண்டு தனது கண் இமைகளை அங்குமிங்குமாகச் செலுத்தி படத்தைப் பார்த்து ஆனந்திக்கிறான். இவ்வளவு அழகு பொருந்தியதொரு உருவத்தைத் திட்டிய தனது பொற்கைகளைப் பார்த்துப் பார்த்து இன்புற்றான். பின் வர்ணக் கோலை எடுத்துப் படத்திலுள்ள பாவையின் ஒரு கண்ணைத் திறந்தான். "ஆஹா! என்ன அழகான கண்? ஏனம்மா ஒரு கண்ணை அடைத்துக்கொண்டு மறு கண்ணால் பார்க்கிறாய்? இரண்டு கண்களையும் காட்டி

விட்டால் உன்னிடம் நான் மயங்கிவிடுவேன் என்று நினைக்கிறீயோ! அதெல்லாம் நம்மிடத்தில் முடியாது' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே மற்றொரு கண்ணைத் திறந்தான். உயிர் வந்துவிட்டது! அழகுத் தெய்வம்தான். அமைதி கலந்த நகையொன்று தனேஸ்வரனின் வதனத்தில் தோன்றி மறைந்தது.

தனேஸ்வரன் திருச்சினுப்பள்ளியில் வாழ்ந்து வந்த பிரபல ஓவியக் கலைஞன், அவன் விரும்பும் அழகு அவ்வூரிலுள்ள பெண்களிடமில்லையென்பது அவனது கருத்து. ஆகவே புதுப்புது அழகு அப் படத்தில்தான் இருக்கிறதென்று எண்ணி மகிழ்வதில் அவனுக்கு ஒரு தனி ஆசை. புற அழகில் மயங்கும் இக்கலைஞன் அழிவற்ற ஆத்ம கமலத்தினின்றெழும் நறுமணத் தென்றல்கள் புது புது அழகைக்கொடுக் கும் தன்மையனவென்பதை அறியான்.

மேற்கூறிய படத்தை வரைந்து முடிக்க நெடு நேரம் ஆய்விட்டதால், தனேஸ்வரன் நடுநிசி தாண்டி படுக்கைக்குச் சென்றான். ஆகவே, காலையில் தபால் காரன் ஜன்னலின் வழியாக அறைக்குள் ஒரு கடி தத்தை போட்டதையும்கூட அவன் கண்டு கொள்ள வில்லை. கொஞ்சநேரம் கழித்து விழித்ததும் கடி தத்தைக் கண்டு கொண்டான். அதைக் கையிலெடுத் துப் பார்த்ததில் அது இரண்டு நாட்களுக்குப் பின்பு அவ்வூரில் நடைபெறப்போகும் மாதர் மகாநாட்டிற் கும் அதற்குமுன் நடைபெறவிருக்கும் தேநீர் விருந் துக்குமான அழைப்பிதழ்களென்பதை அறிந்தான்.

குறித்த நாள் சுமார் 4 மணிக்கு மகாநாடு மண்டபத்தை அடைந்தான் தனேஸ்வரன். வரவேற்புக் கமிற்றித் தலைவியான லீலாவதி வணக்கம்கூறி அவனை வரவேற்றாள். அவ்வூர் பெண்களைப் பற்றிய அவனது கருத்து உலகப் பிரசித்தமென்றாலும் கலைஞன் என்ற நிலையில் எல்லோருக்கும் அவன்மேல் ஒரு தனி மதிப்பு. தேநீர் மண்டபத்தில் ஒரு தனியிடத்தில் உட்கார்ந்திருந்தான் தனேஸ்வரன். அம் மண்டபத்தில் கூடிய பெண்கள்கூட்டம், சிறப்பாக மணமாகாத பெண்களெல்லாம் தனேஸ்வரனைப் பார்ப்பதும் தங்களுக்குள்ளே ஏதேதோ பேசிக்கொள்வதுமாகக் காணப்பட்டனர். அவர்கள் என்னதுதான் பேசுவார்களென்பது தனேஸ்வரனுக்கு நன்றாகத் தெரியும்.

தேநீர் விருந்திற்கான நேரம் வந்துவிட்டது. தேநீர் விருந்துக் கமிற்றி அங்கத்தினர்கள் பதார்த்தங்களை விளம்ப ஆரம்பித்து விட்டனர். கிளாஸில் காப்பியை ஊற்றின கமலா கலைஞனைக் கடைக்கண்ணால் பார்த்ததினால் கிளாஸ் நிறைந்து மறிந்தும் பாய்ந்துவிட்டது காப்பி. பண்டங்களைப் பார்த்துக்கொண்டே தின்றுகொண்டிருந்த தனேஸ்வரன் முகத்தில் மேஜையிலிருந்து இரண்டு மூன்று துளிகள் தெறித்தன. திடீரென்று நிமிர்த்து பார்த்தான். கமலா சிரித்துக்கொண்டே அடுத்த மேஜைக்குச் சென்று விட்டள். “மௌனமாக இருந்தாலும் சனி

யன்கள் விடுவதில்லை'' என்று தனேஸ்வரன் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

சிற்றுண்டி தீர்ந்ததும் எல்லோரும் மண்டபத்தில் போய்க் குழுமினர். நிகழ்ச்சி நிரலில் முதலில் சங்கீதமென்று இடப்பட்டிருந்தது. தமிழ் நாட்டுக் குயில் குஞ்சிதத்தின் பாட்டு என்றும் குறிப்பிடப் பட்டிருந்தது. ஆனால் பெண்கள் மத்தியில் ஒரு பரபரப்பு, முகவாட்டம். பக்க மேளங்களெல்லாம் தயாராய் விட்டன. குஞ்சிதம் வரவில்லை. அவளிடமிருந்து ஒரு தந்தி மட்டுமே கிடைத்தது. "கமலா! குஞ்சிதம் வரவில்லை. முதல் நிகழ்ச்சி இல்லாது போனால் முற்றும் கோணலாய்விடும். நீதான் அதை நிறைவேற்றவேண்டும்'' என்று லீலாவதி கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். "பாடுவதற்குத் தயாராகவில்லை'' என்று கமலா மறுக்கத் தொடங்கியும் ஒருவரும் அவளை விடவில்லை.

"கழுதை! ஆளில் அழகு. இப்பொழுது சங்கீத முப் கூடவா கர்னாடுரா?'' என்று தனக்குள்ளே கூறிக்கொண்டு இழிநகையொன்று புரிந்தான் தனேஸ்வரன். சபையில் எங்கும் நிசப்தம். 'உலகிலுள்ளவரில் உத்தமப் பெண்மணியார்'' என்ற பாடலை ஹம்சத்துவனி ராகத்தில் பாடினாள். குயிலினுமினிய அவளது குரலொலி அலை அலையாக ஆகாயத்தில் பிரயாணம் செய்து தனேஸ்வரனின் இதயகமலத்தை யடைந்து அதை அங்குமிங்குமாக அசைத்தது. வெளியே உள்ள ஒரு பூந்தோட்டத்தின் எழிலை

ஜன்னல் வழியாகக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்த தனேஸ்வரனின் முகம் சற்று திரும்ப ஆரம்பித்தது. பெண்டிரும் ஆடவரும் பாட்டின் இனிமையைச் சுவைத்துச் சுவைத்து இன்புற்றனர். சங்கீதத்தில் ஆழ்ந்த தனேஸ்வரன் தன்னையே மறந்து கீதத்தில் ஒன்றுபடும் நிலையை அடைந்துவிட்டான். சங்கீத சாகரத்தில் பொங்கியெழுந்த அமுதத்தினுடைய சுவையில் சொக்கிய தனேஸ்வரன் கண்களைத்திறந்து கமலாவின் கமல வதனத்தைக் கண்டான். அவளது முகத்தில் ஒரு சோபை!

இதயத்திலிருந்து எழுந்த ஒலி ஒளியாக மாறி அருள்நிறைந்த அவளது முகத்தை இன்னும் சோபிக்கச் செய்தது. அவள் தெய்விக ஒளிபெற்றிலங்கி ஓவியத்தில் எழுதவொண்ணு உருப்பெற்றுத் தோன்றுவதாக உணர்ந்தான் தனேஸ்வரன். கமலா அவனது இதயத்தில் புகுந்து விட்டாள்; அவளிடம் தன்னை ஏதோ ஒரு சக்தி இழுத்துச் செல்லுவதாக அவன் உணர்ந்தான்.

வரவேற்புப் பிரசங்கம், மற்று சொற்பொழிவுகள், கரகோஷம் இதெல்லாம் தனேஸ்வரன் காதில் நுழையவில்லை. எல்லோரும் பேசப்படும் விஷயங்களை மௌனமாக இருந்து கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தனர். வெளியே நல்ல இருள். "ஆண்களும் பெண்களும் சரிநிகர் சமானம்" என்னும் பொருள்பற்றிப் பேசும் பண்டிதை தனலக்ஷ்மி அம்

மாளின் பிரசங்கமே கடைசிப் பிரசங்கம். ஆகையால் நன்றிகூறும்போது தலைவர், சொற்பொழிவாளர்கள் முதலியோருக்கு சூட்டவேண்டிய பூமாலைகளை எடுத்துவர கமலா அடுத்த கட்டிடத்திற்குச் சென்றதைத் தனேஸ்வரன் கண்டான். உடனே வெளிக் கிளம்பினான். மாலையை எடுத்துக்கொண்டு வெளிக்கதவைப் பூட்டினாள் கமலா. பூட்டி விட்டுத் திரும்பியதும் அவள் முன் நின்றான் தனேஸ்வரன். கமலா தலை குனிந்து மலர்களைப் பார்த்தவண்ணமே நின்றுவிட்டாள். "கமலா என்னை நீ மன்னிக்கவேண்டும்" அதுவும் பெண்ணுலகச் சார்பில் மன்னிக்கவும். அழகு பற்றி நான் கொண்ட கருத்க்கள் அர்த்தமற்றவை என அறிந்துகொண்டேன். அழகு தெய்வீகமானது. உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் உனது சங்கீதக் கலை அதை அறிவித்துவிட்டது. எனது இதயத்தில் புகுந்து விட்டாய்! உன்னையே காதலிக்கிறேன்." "ஐயோ! நேரமாய்விட்டதே! ஐயோ நான் என்ன செய்வேன்!' என்று சற்று உரப்பாகச் சொன்னாள். "ஒன்றும் செய்யவேண்டாம். சப்தமிடாதே. யாராவது வந்துவிடுவார்கள்" என்று கூறி தனேஸ்வரன் ஆட்கள் வருகிறார்களா என்று அங்குமிங்கும் பார்க்க, கமலா புள்ளிமானைப்போல் துள்ளி மறைந்துவிட்டாள். மங்களமாக மகாநாடு முற்றுப்பெற்றது.

மறுநாள் காலையில் ஒரு பையன் கமலாவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து மறைந்தான். திறந்தாள் கடிதத்தை.

சரஸ்வதி நிலையம்,
8-10-1941.

எனது அன்பின் கனியே!

புறத்தோற்றமட்டும் அழகை அமைப்பதற்குப் போதாது. அகத் தூய்மையும், கலா ஞானமும், அழகுக்கு இன்றியமையாதது எனக் கண்டுகொள்ளத் துணையாயிருந்த உனக்கு பெரும் கடமைப்பட்டுள்ளேன். இனி நான் கலா ஞானமும், ஆத்மீக ஒளியும் காட்டும் சித்திரங்கள் பல தீட்டித் தருவேன். அப்பணி நடைபெறவேண்டுமானால் கலைமணம் பெற்ற உனது இதய கமலம் எனது உள்ளத் தடத்தினில் மலரவேண்டும். அன்று இரவில் நான் கேட்டதற்குப் பதில் கூறவேண்டும். மறுத்தால் என்ன நேருமென்று அறியேன். உனது காதலைப் பெற்றால் உலகம் உயர்ந்த ஓவியத் திரவியத்தை என்னிடமிருந்து பெறும்.

'மனம் தெளிந்த தனேஸ்வரன்'

"நேற்று வரையிலும் பெண்களை மதியாது பேசித் திரிந்த பேர்வழிக்கு இன்று புத்தி உதயமாம்! காதலாம், கலாஞானமாம். சீ! இவனுடைய அன்பின் ஆழம் எவ்வளவுதான் இருக்கமுடியும்! இவனுடைய பேச்சை பெண்ணுலகம் கேட்டால் நகைக்கும். காப்பி கிளாஸில் விட்டுக்கொண்டே நான் பார்த்தபோது அவன்......சீ! வேண்டாம்.

கோபத்தோடு கமலா மேஜையில் உள்ள புத்தகங்களை அங்குமிங்கும் புரட்டி

கடைசியில் பவுண்டன் பேனவைக்கண்டு பிடித்தாள். ஒரு பழைய நோட் புக்கிலிருந்து ஒரு தாளைக்கிழி இவ்வாறு எழுதத் தொடங்கினள்.

"நண்பர் தனேஸ்வரன் அவர்களுக்கு நமஸ்காரம். உமது கருத்தில் ஏற்பட்டிருப்பதாக நீர் கூறும் மாற்றத்தைக் கண்டு பெண்ணுலகம் நகைக்கிறது. இவ்வளவோடு விஷயம் முற்றிற்று."

கமலா.

கவரிலுள்ள மேல்விலாஸ எழுத்துக்களை ஏற இறங்கப் பார்த்து ஆனந்தித்தான் தனேஸ்வரன். அவ்வெழுத்துக்களை எழுதிய பொற்கைகளைப் போற்றினன். பதில் சாதகமாக இருக்க வேண்டுமென்று கடவுளைத் தியானித்துக்கொண்டே கவரைக் கிழித்தான். 'நண்பர்' ஆஹா! அது சரிதான். அடுத்தபடி தானே காதலர். "விஷயம் முற்றிற்று! அப்படியா! பின் எனது வாழ்வும் முற்றிற்று"

எழுத்தைக்கிழித்தெறிந்தான். மேல் செய்யவேண்டியதைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கலானன். யுத்தகாலமென்பதைக்கூட கவனியாது திருச்சினப்பள்ளியைவிட்டு சென்னைக்குப் போய் விடுவதென்று தனேஸ்வரன் தீர்மானித்தான்.

சென்னை திருவல்லிக்கேணியிலுள்ள ஒரு ஹோட்டலின் தட்டிலுள்ள நாலாம் நம்பர் அறை. அவ்வறையில் சரஸ்வதி நிலையம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது ஒரு தடவையாவது கமலாவின் உருவமும், அவள்

அன்று பாடிய கீதமும் அவன் மனதில் தோன்றி மறையாத நாளே கிடையாது. அவளைப் பற்றிய நினைவு வேகமாய்த் தாக்கும் மாலை நேரத்தில் எட்டு மணி வரையிலாவது கடற்கரையில் இருக்கலாமென்றால் யுத்த காரணமாக எங்கும் விளக்கணைப்பு. ஆட்கள் நடமாட்டமில்லை. இருள் வந்துவிட்டால் ரோட்டில் நடந்து செல்லுவதே அபாயகரமானதாய் விட்டது. ஆகவே அவனது உள்ளத்தை உடைக்கும் அச்சிந்தனை கூடியதேதவிர, அதனைத் தணிக்க வழியொன்றும் கிடைக்கவில்லை.

தனேஸ்வரன் சென்னைக்கு வந்து ஆறு மாதங்களாய்விட்டன. வெளியே செல்லுவதை அநேகமாய் நிறுத்திவிட்டு சில நாட்களாகத் தனேஸ்வரன் இரண்டு சித்திரங்களைத் தீட்டுவதில் பெரும் கவனமெடுத்து உழைத்துவந்தான்.

சித்திரங்கள் முற்றுப்பெற்ற அந்நாள் ஒரு நன்னாளாகவே தனேஸ்வரனுக்குத் தோன்றியது. அப்படங்கள் கவலைகொண்ட அவனது மனதிற்கு மன அமைதியையும், திருப்தியையும் அளித்தன. ஒரு படத்தை மார்போடு அணைத்து மகிழும் போது கணவன் என்ற உணர்ச்சி பொங்கியது; மற்றொரு படத்தை அணைத்து மகிழும்போது தந்தை என்ற உணர்ச்சி ததும்பியது. அடைதற்கரிய இன்பத்தை அடைந்து விட்டதாக எண்ணி சாந்தியடைந்தான். 'விஷயம் முற்றிற்று' எனக் கூறிக்கொண்டு வெளியே புறப்பட்டான் இரவில்.

இருள் நீங்கி இரவி தோன்றிவிட்டது. காலை தினசரிப் பத்திரிகைகள் வெளிவந்துவிட்டன. அதில் ஒரு முக்கியமான செய்தி. இரவில் மவுண்ட் ரோடு வழியாக சென்றுகொண்டிருந்த தனேஸ்வரன் என்ற பிரபல ஓவியக் கலைஞர் மோட்டார் விபத்தில் சிக்கி பலத்த காயமடைந்தார். அவர் அணிந்திருந்த கண்ணாடியின் சில்கள் கொறுங்கியதன் காரணமாக அவரது கண்களுக்குப் பெரும் அபாயம் நேரிட்டிருக்கிறது. அவர் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்பட்டார் என்பது செய்தியின் சுருக்கம்.

இப்பொழுது கமலா எங்கிருக்கிறாள்? தனேஸ்வரனது கலாஞானத்தில் வியப்பும் மதிப்புங்கொண்ட கமலாவுக்கு அவனது மறைவு மன அதிர்ச்சியைக் கொடுத்துவிட்டது. கலைஞன் ஒருவனின் வாழ்க்கையைக் கொலைத்த கமலாவுக்கு வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றிவிட்டது. கலை பிரேமையால் காதல் உணர்ச்சிபெற்ற தனேஸ்வரனின் மனம் தூய்மையுடையதென்ற எண்ணம் அவளைப் புண்படுத்தியது. அவள் உள்ளம் உடைந்தவளாய் இருந்த நிலையில் ஒரு நாள் பத்திரிகையில் யுத்த சேவையில் மருத்துவ சிகிச்சைப் பகுதிக்கு நர்ஸ்கள் அவசியமென்ற பத்திரிகை விளம்பரத்தைப் பார்த்து விண்ணப்பம் அனுப்பினாள். விண்ணப்பம் அங்கீகரிக்கப்பட்டதால் இது சமயத்தில் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் கமலா நர்ஸ் பயிற்சியைப் பூர்த்தி செய்திருக்கிறாள்.

தனேஸ்வரன் ஒரு பிரபல ஓவியக் கலைஞன் என்பதை ஆஸ்பத்திரி அதிகாரிகள் அறிந்திருந்த தால் அவனுக்கு ஒரு தனி அறைகொடுத்து நல்ல முறையில் மருத்துவ சிகில்சை கொடுத்து வந்தனர்.

காலையில் கிடைக்கும் தினசரிப் பத்திரிகையின் தலைப்புகளையும் செய்திச் சுருக்கத்தையும் கிடைத்த வுடன் பார்த்துவிடுவது கமலாவின் வழக்கம். மாலை யில் செய்தி முழுமையும் படித்துவிடுவாள். அன்று வெளியான தனேஸ்வரனைப் பற்றிய திடுக்கிடும் செய் திகேட்டு மனம் கலங்கினாள். மாதர் மகாநாட்டன்று அவனது கருத்துக் கிசைந்திருந்தால் இப்பரிதாப நிலை அவனுக்கு ஏற்பட்டிருக்குமாவென்பதை எண் ணியதும் அவள் மனமுடைந்தது. உடையை மாற்றி விட்டு விரைந்து சென்றாள் கமலா. ஆஸ்பத்திரியில் பெரும் பரபரப்பு. நகரத்திலுள்ள கலைஞர்களும் கலாரசிகர்களும் கூட்டம் கூட்டமாக வந்து தனேஸ் வரனைப் பார்த்துச் சென்றனர். மிஸ் எல்ஸி யென்ற ஆங்கிலோ-இந்திய நார்ஸிடமிருந்து விப ரங்களை அறிந்துகொண்டாள். தனேஸ்வரன் காயப் பட்டு, கண்கள் கட்டப்பட்டு கட்டிலில் கிடக்கும் பரிதாபக் கோலத்தைக்கண்ட கமலா கண்ணீர் தாரை தாரையாக வடித்திருப்பாள் அந்த அறையில் பட் டும் ஆட்கள் இல்லாதிருந்தால். தனேஸ்வரனுக்கு நர்ஸ் செய்ய வேண்டுமென்பது அவளது பேரவா. தனேஸ்வரனுக்கு நர்ஸ் செய்யும் மிஸ் எல்ஸியின்

துணையாக கமலா நியமிக்கப்பட்டிருப்பதாக அன்று மாலை அறிந்ததும் கமலா அடைந்த களிப்புக்கு எல்லையில்லை.

“அம்மா! என்ன அன்போடு என்னை கவனித்து வருகிறீர்கள். கழிந்த ஒரு வாரமாக என்னிடம் நீங்கள் காட்டும் இரக்கம் வெறும் வார்த்தைகளால் கூறுந்தரமல்ல. உங்களது உதவியை என்றும் மறக்கமாட்டேன்”

‘அம்மா’வென்ற சொல் கமலாவுக்குச் சிரிப்பை உண்டுபண்ணி விட்டது. ஆனால் அதைச் அடக்கிக் கொண்டாள். “அம்மா மீண்டும் எனக்குப் பார்வை கிடைக்குமானால் உங்கள் உருவத்தை ஒரு அழகிய சித்திரமாக வரைந்து கைம்மாறு செய்வேன். கிடையாதுபோனால் அடுத்த ஜென்மத்தில் ஓவியக்கலைஞனுகப் பிறந்து அதை முடிப்பேன். ஆ!என்ன வேதனையாக இருக்கிறது. கடவுள் மனுஷனை என்ன விதத்திலெல்லாம் சோதிக்கிருர்! நினைத்தது கைகூடியிருந்தால் உலகம் எவ்வளவு உயிர்ததும்பும் ஓவியங்களைப் பெற்றிருக்கும்” என்று கூறியதும் இரு கன்னங்கள் வழியாய் நீர் வடிய ஆரம்பித்துவிட்டது.

“ஐயா! அழாதீர்கள். கண் சிகில்சை பெற்று கட்டுண்டிருக்கும்போது அழக்கூடாது. உங்களைப் போன்ற கலைஞர்களுக்குத் தொண்டு செய்வதே எனக்குக் கிடைத்த பெரும் பாக்கியம். கவலைப்பட வேண்டாம்” என்று கூறி தனது கண்களை தொடைத்துக்கொண்டாள் கமலா.

"அம்மா! நீங்கள் எனக்கு ஒரு பெரும் உதவி செய்யவேண்டும். இனிமேல் சித்திரங்கள் வரைய முடியுமோ என்னமோ தெரியாது. நான் வரைந்தவைகளாவது பிரயோஜனமுள்ளதாக இருக்கவேண்டும். திருவல்லிக்கேணியிலிருக்கும் சரஸ்வதி நிலயத்திற்குச் சென்று பல பக்கங்களில் சிதறிக்கிடக்கும் நான் வரைந்த படங்களைப் பெட்டியில் கவனமாக வைத்துப் பூட்டி வரவேண்டும். கதவைத் திறந்ததும் நேரே இரு புதிய படங்களைக் காண்பீர்கள். அவைகளைச் சற்று கவனமாக எடுத்து வையுங்கள். என்னுடைய நிலயம் உங்களுக்கு கண்விருந்தளிக்கும். இவ்வுதவிக்கு நான் ரொம்ப நன்றியுடையவனாக இருப்பேன் என்ற இரக்கமான குரலில் கூறினான். கமலா இசைந்தாள்.

அன்று மாலை, சந்தி நேரம். கமலா தனேஸ்வரனிடமிருந்து சாவிக்கொத்தை வாங்கிக்கொண்டு, தனது பேட்டரி விளக்குடன் திருவல்லிக்கேணியை நோக்கிச் சென்றாள்.

கமலா தனேஸ்வரனின் நிலயத்தை நண்ணும் போது நல்ல இருட்டாய்விட்டது. அவன் கூறிய அடையாளங்களை வைத்துக்கொண்டு இடத்தைக் கண்டுகொண்டாள். கதவைத் திறந்து தனது பேட்டரிலயிட்டைக் கொளுத்தினாள். நேரே வெளிச்சம் ஒரு படத்தின் மேல் பட்டது. கையைச் சற்று திருப்பியதும் மற்றொரு படத்தில் வெளிச்சம் படிந்தது.

அப்படங்கள் பெண்ணின் படமென்று அறிந்துகொண் டதேதவிர வேறொன்றும் அவளுக்குத் தெரியவில்லை. அறையின் உள்ளே சென்று லாம்பைக்கண்டுபிடித்து விளக்கேற்றினாள். அறையிலுள்ள வர்ணக்குழம்பு கொண்ட சிறு டப்பிகளையும், எழுதுகோல்களையும் கண்டாள். அறையினுள் நுழைந்ததிலிருந்து ஏதோ தனக்குச் சொந்தமான இடத்தில் இருப்பதாகவும், அங்கு காணப்படும் பொருள்கள் தனக்குச் சொந்த மானதென்றும் என்னும்படியான ஒரு உணர்ச்சி அவளுக்கு எற்பட்டது.

சில்லறை சாமானங்களை ஒரு பக்கமாக வைத்த தும், கவனமாக வைக்கவேண்டுமென்று அவன் கூறிய படங்களைப் பார்க்க விளக்குடன் சென்றாள். முதல் படம் அவளுக்குச் சிரிப்பை உண்டுபண்ணிவிட்டது. இதுதான் கமலாவை மணக்கோலத்தில் காட்டும் சித் திரம். இரண்டாவது படம் அவளது மனதில் சிறு அதிர்ச்சியை உண்டுபண்ணியது. தாயின் அன்பு நிறைந்த வதனத்தையும், சேயின் மாசற்ற புன் முறுவலையும் பார்த்தாள்; மனங்குழைந்தாள். தன் னைத் தாயாக சித்ரித்துக் காட்டும் இப்படம் அவளது தாய்மை உணர்ச்சியைக் கிளப்பியது. இச் சித்திரத் தை வரைந்த பொற்கைகளை நினைத்தாள்! அதனை பார்த்து வரைந்த கண்களை நினைத்தபோது அழ ஆரம் பித்துவிட்டாள். "அன்று மறுத்தாயே! இன்று எனது மனைவியும், ஒரு குழந்தையின் தாயுமாய்விட்டாய்

பார்த்தாயா? வெற்றிபெற்றது யார்? நீயா? நானா? என்று திரை மறைவிலிருந்து தனேஸ்வரன் தாழ்ந்த குரலில் கூறுவதுபோன்று அவளுக்குக் கேட்டது. சுவரில் சாய்ந்து ஏங்கி ஏங்கி அழுதாள் கமலா; ஏங்கித் தேற்றுவார் யாருமில்லை. சில நிமிடங்களுக்குப் பின்பு தெளிந்த கமலா படங்களைப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு மேஜைக்கு வந்தாள். தனேஸ்வரனுக்கு ஒருமுக்கியமான கடிதத்தை எழுதி, மேல் விலாசத்தில் 'அந்தரங்கம்' என்றும் குறித்தாள். ரூமின் வெளியே வந்து எழுத்தை ஆஸ்பத்திரிமேல் விலாஸத்துக்கு போஸ்ட் செய்து விட்டுதிரும்பினாள்.

"ஐயா! உங்களுக்கு ஒரு எழுத்து வந்திருக்கிறதே" என்றாள் கமலா. "எனக்கு வரும் எவ்வளவோ கடிதங்களை நீங்கள்தானே வாசித்துக் காட்டுகிறீர்கள், இதையும் வாசியுங்கள் கேட்கட்டும்" என்று ஆவலோடு கூறினான் தனேஸ்வரன். 'ஆனால் இன்றைய எழுத்தில் 'அந்தரங்கம்' என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆகையால்தான் சிறிது தயங்குகிறேன்." என்று கூறிக்கொண்டே கமலா புன்முறுவல் பூத்தாள். "அம்மா! என்ன சொல்லுகிறீர்கள். இப்பொழுது என்து கண்கள் நீங்களல்லவா? நீங்கள் வாசிப்பது பற்றி எனக்கு ஒரு ஆட்சேபனையுமில்லை" என்று கூறிமுடிந்ததும் தனேஸ்வரன் நெற்றியைச் சுளித்ததைக்கண்ட கமலா, தனேஸ்வரன் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பதாக உணர்ந்தாள்.

"ஓவியக்கலைஞருக்கு உள்ளம் உடைந்த கமலா எழுதுவது. சமீபத்தில் சென்னையில் வைத்து உங்

களுக்கு நேரிட்ட விபத்தையறிந்து திடுக்கிட்டேன்த அன்று நான் உங்களது கருத்துக் கிசைந்திருந்தால். இந்தக் கொடுப விபத்து ஏற்பட்டிருக்குமா வென்பதை எண்ணியதும் எனது உள்ளம் உடைந்துவிட்டது. மன்னியுங்கள். கர்வத்தில் கடிந்து கூறிய இப்பேதை யின் சொற்களைப் பொறுங்கள். கண்கள் ஊறுபட்ட தால் கவலையிலிருக்கும் உங்களது நிலையை எண்ணி எனது மனம் துடிக்கிறது. மன்னித்தேனென்று உங்களது திருக்கையால் எழுதி அனுப்புங்கள். மனச் சாந்திபெறுவேன். விரைந்து வந்து எனது உடல் பொருள் ஆவி மூன்றையும் உங்களுக்குப் பணியாற்றி அர்ப்பணம் செய்வேன். இல்லையேல உயிர்தரியேன்.

"அம்மா! நீங்கள் எங்கியும், விட்டு விட்டும் வாசிப்பதைப் பார்த்தால் கமலாவின் பிரலாபத்தைக் கண்டு என்னைவிட நீங்கள் ரொம்ப இரக்கம் கொள்வ தாகத் தெரிகிறது! என்னுடைய சுக துக்கங்களில் நீங்கள் இவ்வளவு அபிமானம் காட்டுவதற்கு நான் என்ன கைமாறு செய்வேன்!

கன்னங்களில் நீர் தோயப்பெற்ற கமலாவும், பழைய நினைவுகள் ஒவ்வொன்றாக மனத்திரையில் வந்து வந்து மறைய மனங்கலங்கும் தனேஸ்வரனும் சில நிமிடங்கள் ஒன்றுமே பேசாதிருந்தனர். முகத் தில் ஒவ்வொரு நிமிடமும் தோன்றி மறையும் சோ கக் குறிகளின் பரிதாபக் காட்சி கமலாவின் கவலைத் தீக்கு காற்றுக் கொடுப்பதுபோலிருந்தது. நிசப்த

மாயிருந்ததால் நர்ஸ் ஏதோ தன்மீது கோபித்துக் கொண்டு சென்றுவிட்டாளென்று பயந்த தனேஸ்வரன் "இங்கே ஒருவருமில்லையா?" என்று ஏக்கமுடன் கேட்டான். "நான்தான் இருக்கிறேனே" என்று பதறிக்கூறினாள் கமலா. "அம்மா இவ்வெழுத்து எனது வாழ்க்கையிலுள்ள ஒரு அத்தியாயத்தைக் குறிக்கிறது. என்னைப்பற்றி சந்தேகம் கொண்டு என்னை வெறுத்துத் தள்ளாது காப்பாற்ற வேண்டும். மன்னிக்கவும்" எழுத்திற்கு என்ன பதிலென்பதை ஆவலோடு எதிர்பார்க்கும் கமலாவின் செவிகளில் பேற்கூறிய சொற்கள் விழவே இல்லை. "அம்மா! எனக்கு ஒரு கடுதாசியும் பவுண்டன்பேனாவும் தாருங்கள்" என்று சொல்ல உடனேயே கமலா ஒரு நாற்காலியைக் கட்டிலின் முன் கொண்டுவந்தாள். எழுந்திருந்து சிறிது நேரம் யோசித்தான் தனேஸ்வரன். கமலா, அவன் கைகளைப் பிடித்து காகிதத்தின்மேல் வைத்தாள். மனநிறைவுடன் தனேஸ்வரன் "கமலா மனப்பூர்வமாக மன்னித்தேன்" என்று கையொப்பமிட்டான். கமலாவின் மேல்விலாசத்தில் திருச்சிக்குக் கடிதத்தை போஸ்ட் செய்யும்படி நர்ஸை வேண்டிக்கொண்டு கட்டிலில் படுத்துக்கொண்டான்.

ஒவ்வொரு எழுத்தும் எழுத எழுத கமலாவின் உள்ளம் இரவியைக் கண்ட கமலத்தின் இதழ்கள் விரிவதுபோல் விரிந்து பூரிப்படைந்தது. இருள் நிறைந்துவிட்டது அறையில். கமலா எலக்ட்ரிக் லைட்டைக் கொளுத்த ஸ்விச்சைத் தட்டினாள். இருள்

மறைந்தது. எங்கும் பிரகாசம். தாழ்ந்தகுரலில் இனிமைகுறையாது "உலகிலுள்ளவர்களில் உத்தமப்பெண் மணி யார்?" என்ற பாடலைப் பாடினாள், பாட்டைக் கேட்ட தினேஸ்வரனுக்கு மகாநாடு ஞாபகம் வந்தது. பாடலின் இனிமையும் குரலின் தன்மையும் நர்ஸ் கமலா தனது காதலி கமலா வென்பதை உறுதிப் படுத்தியது. பாடல் பாதியானதும் "கமலா! என்ன நாடகம் நடத்திவிட்டாய்" என்று வலது கரத்தால் அவளைத் தட்டினான்.

---

*காதலுக்கு ஜாதியென்றும், உயர்வு தாழ்வென்றும் உண்டா? இல்லவே இல்லே. நீங்கள் என்னைப் பார்த்தீர்கள். நான் உங்களைப் பார்த்தேன். காதல் கொண்டோம். அங்கு ஜாதி எங்கு வந்தது.*

# சாரதாவின் காதல்

பெ. தூரன்

"சாரதா, கலியாணமான பிறகாவது இதைச் சொல்லியிருக்கக்கூடாதா? அப்பொழுது எப்படியாவது சரி சரி யென்றிருந்திருப்பேனே. கிருஸ்துவ மதத்தில் சேர்ந்துகொண்டாயென்று தெரிந்த பின்பு நான் எப்படி மனமிசைந்து உன்னைக் கலியாணம் செய்து கொள்வது?" எனப் பலவாறு அருணாசலம் சிந்தித்துக்கொண்டிருந்தான். அவன் உட்கார்ந்திருக்கும் அறையில் ஒரே நிசப்தம். தை மாதத்து மூடுபனியைத் துரத்திவிட்டுச் சூரிய கிரணங்கள் ஜன்னலின் வழியாக அறைக்குள் அரவமில்லாமல்ப் புகுந்து நிலத்தில் ஒரு ஒளிப் படலத்தை உண்டுபண்ணின. அருணாசலத்தின் எதிரில் அவன் தந்தை ராமசாமிப்பிள்ளை படுத்த படுக்கையாக கிடக்கிறார். பல வருஷங்களாக அவரை வாட்டிவந்த

ஒருவித நோயால் இப்பொழுது அவர் மிகவும் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்தார். இனிமேல் வெகுநாட்களுக்குப் பிழைத்திருக்கமுடியாது என்று வைத்தியர்கள் கூறிவிட்டபடியால், அவருடைய விருப்பத்தின்படி அருணசலம் கல்லூரியிலிருந்து ஒரு வாரத்திற்கு ரஜா வாங்கிக்கொண்டு அங்கு வந்திருக்கிறான்.

புதுப்பாளையத்திற்கு வந்ததுமுதல் அருணசலம் தன் தகப்பனுக்கு வைத்தியர் குறிப்பிட்டவேளைகளில் மருந்து கொடுப்பது, ஆகாரம் கொடுப்பது முதலிய பணிவிடைகளைச் சிரத்தையோடு செய்து வந்தான். சதா அவர் படுக்கைக்குப் பக்கத்திலேயே இருப்பான். வைத்தியர் அவரைப் பேசாமலிருக்கும்படி கூறியிருந்தபடியால் அவர் பேச வாயெடுத்தாலும் அருணசலம் பேசவேண்டாமென்று கேட்டுக்கொள்வான். "அப்பா, சௌக்கியமான பிறகு அதெல்லாம் பேசிக்கொள்ளலாம், இப்பொழுது பேசவேண்டாம்" என்று வாஞ்சையுடன் வற்புறுத்துவான். தனது அருமைத் தந்தை எப்படியாவது சுகப்படவேண்டுமென்று கடவுளைத் தியானிப்பான். அவனுக்குத் தன் தகப்பனைத்தவிர வேறு உறவினர்கள் அந்த ஊரிற் கிடையாது; வேறு இடங்களில் இருப்பார்களோ என்னவோ, பலர் ராமசாமிப் பிள்ளையுடன் நேசம் பாராட்டி வருவதுண்டு, ஆனல் சொந்தக்காரரென்று யாரும் வந்ததில்லை.

ராமசாமி பிள்ளையின் நிலைமை நம்பிக்கைக்கிட மில்லாமல் இருந்ததோடு அவரும் குணப்பட்டு எழுந் திருக்க ஆவலுள்ளவராகக் காணப்படவில்லை. அதற்கு மாறாக அவர் யமனைச் சீக்கிரம் வரும்படி அழைப்ப வர்போல் தோன்றினர். சாகக்கிடக்கும் தந்தை யின் அருகில் தன்னந்தனியாகவிருக்கும் அருணாச லத்தின் மனதில் பல எண்ணங்கள் தோன்றி மறைந்துகொண்டேயிருந்தன. ஐந்து மாதங்களுக்கு முன்பு சென்னை சென்று மாகாணக் கல்லூரியில் எப். ஏ. முதல் வகுப்பில் சேர்ந்ததும், ஒரு நாள் அகஸ்மாத்தாக ராணி மேரி கல்லூரியிற் பயிலும் சாரதாளைச் சந்தித்ததும், அவள் புதுப்பாளையத்தில் முன்பு வாசித்து வந்த குமாரசாமிப் பிள்ளையின் மகள் என்பதை அறிந்ததும், பின்பு இருவரும் ஒருவரை யொருவர் காதலித்ததும், இப்படிச் சென்னையில் நிகழ்ந்த பல சம்பவங்களும் ஒவ்வொன்ருய்த் தெளி வாக அவன் மனக் கண்ணுக்குப் புலப்பட்டன.

சாரதாளின் மின்னற்கொடிபோன்ற உருவம் அடிக்கடி அவன் முன்பு தோன்றிற்று. முழு நிலா தனது வெள்ளிய மதுக் கிரணங்களைப் பொழிந்து கொண்டிருந்த ஓரிரவு அவன் சாரதாளுடன் கடற் கரையில் தனிமையாகவிருந்து தன் காதலை வெளி யிட்டான். அப்பொழுது அவள் சந்திரிகையுடன் பூவு லகத்திற்கு வந்த ஒரு தேவதைபோல் விளங்கினள். அவள் அவனை அடங்காத காதலுடன் அணைத்துக் கொண்டு செவிகளில், "என் உயிரே" என்று கூறி

விட்டு மௌனமாக இருந்ததை அவனால் மறக்கவே முடியவில்லை.

அருணாசலம் ஊர் வந்து மூன்று நாட்களான பின்பு சாரதாளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது அதைப் பார்க்கும் வரையில் அவன் தான் சாரதாளை முழுமன துடன் காதலிப்பதாக எண்ணியிருந்தான். ஆனால் அக் கடிதத்தில் கண்ட விஷயங்கள் அவன் எண்ணத்தைக் குலைத்துவிட்டன. அதில், சாரதாளின் தாய் தந்தையர் திடீரென்று காலராவில் இறந்துபோன பின்பு அவள் திக்கற்றவளானதும், அது சமயம் அவளுக்குப் படிப்புச் சொல்லிக்கொடுத்த கிருஸ்துவப் பாதிரிப் பெண் கிருஸ்தவ மதத்தில் சேர்ந்துகொண்டால் மேல் படிப்புக்கு ஏற்பாடு செய்து ஏதாவது நல்ல உத்தியோகம் வாங்கித் தருவதாகக் கூறியதும், கல்வியறிவில்லாத தனது உறவினர்களோடு அவர்களிச்சைப்படி வாழ இஷ்டமில்லாததாலும் வேறு வழியில்லாததாலும் அப்பாதிரிப் பெண்ணின் விருப்பத்தின்படியே ரகஸ்யமாகக் கிருஸ்துவ மதத்திற் சேர்ந்துகொண்டு கல்லூரியில் சேர்ந்ததும் விபரமாக எழுதப்பட்டிருந்தன. "நான் அன்று கிருஸ்துவ மதத்தில பெரியதொரு நம்பிக்கை கொண்டு சேரவில்லை, ஆனால் அதிற் சேர்ந்ததினாலேயே படிக்க முடிந்தது; சுயேச்சையாக வாழ முடிந்தது; இவற்றையெல்லாம்விட உங்களைப் பார்த்துக் காதலிக்கவும் சந்தர்ப்பம் வாய்த்தது. அருணா! உங்களுக்கு இந்தச் சாதிக்கட்டுகள் அர்த்தமற்றவை

என்று நன்கு தெரிந்திருக்கும். இதைப்பற்றி நான் ஒன்றும் கூறவேண்டுவதேயில்லை. நமது காதலை எண்ணிப் பாருங்கள். அதற்கு முன் இந்த முட்டாள் தனமான பழக்கட்டுகளெல்லாம் ஒன்றுமில்லாமற் போகாதா? இக்காலத்தில் சீர்திருத்தமான முறையில் பல கலப்பு விவாகங்கள் நடைபெறுகின்றன" என் றிவ்வாறு சாரதா தனது காதலனிடம் பூரண நம் பிக்கையுடன் தனது குழந்தை உளளத்தில் தோன்றிய வற்றையெல்லாம காதல் மொழிகளால் எழுதியிருக் கிறாள்.

இக்கடிதத்தை அருணாசலம் ஐந்தாவது முறை யாக இன்று வாசித்துப் பார்த்தான். படிக்கும்போ தெல்லாம் சாரதாவின் அழகிய ரோஜா ஹாரம் போன்ற அற்புத வடிவம் அவன் முன்பு தோன்றி யது. அவளது பரந்த வரி படர்ந்த கண்கள் குழந் தைகளது கண்களைப்போலக் கபடற்றுப் பிரகாசித் தன. அருணாசலத்திற்கு என்ன முடிவுக்கு வருவ தென்று புலப்படவில்லை.

அவன் சிறுவயது முதல் புதுப்பாளையத்திலே யே வாழ்ந்து வந்தவன். பத்தாவதுவரை அங்கிருந்து கொண்டே பக்கத்திலிருந்த ஒரு நகர ஹைஸ்கூலில் படித்து வந்தான். பள்ளியிற் கழியும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் அவன் பெரும் பாலும் மூடக்கொள்கைகளையும், வழக்கங்களையுமே கைக்கொண்டு வரும் கிராமவாசிகளுடனேயே பழகி வந்தான். அருணாசலம் தெய்வ பக்தியுடையவன்.

அவனுக்குத் தெய்வபக்தியை வளர்த்ததெல்லாம் புராணங்களே. அவற்றிலுள்ள ஆபாசங்களைத் தள்ளி விட்டு நல்லதை மட்டும் எடுத்துக்கொள்ளக்கூடிய அறிவு அவனுக்கு இன்னும் ஏற்படவில்லை. ஐந்து மாதங்கள் சென்னையில் அவன் வாழ்ந்திருந்தபோதி லும் அவன் அதிகமாக யாருடனும் பழக்கம் வைத் துக்கொள்ளவில்லை. நாட்டு நடவடிக்கைகளிலும் இயக்கங்களிலும் அவன் அதிக உற்சாகங்காட்டாம லிருந்தான்.

பொதுவாகக் கிராம மக்களில் பலர் அர்த்த மற்ற ஆசாரங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண் டிருப்பவர்கள். அதிலும் கொஞ்சம் தெய்வ பக்தி யுடையவர்களாக இருந்துவிட்டால் சொல்லவேண் டுவதேயில்லை. அவர்களுக்கு சாதி, ஆசாரம், உயர்வு தாழ்வு இவைகளே கடவுளிடம் செல்லப் புஷ்பக விமானங்களாகத் தோன்றும்.

ஆனால் ராமசாமிப் பிள்ளை இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவரல்ல. அவரும் பக்தியுள்ளவரே; அதோடு பரந்த நோக்கமும் உடையவர். குருட்டு நம்பிக்கை களுக்கும் அவருக்கும் வெகுதூரம். இருந்தாலும் அவர் எப்பொழுதும் ஏக்கம் பிடித்தவர்போலக் காணப்பட்டார்; யாருடனும் அதிகமாகக் கலந்து கொள்ளமாட்டார். அருணாசலத்தைக் கண்டபோது தான் அவர் முகம் சிறிது பிரகாசமடையும். மற்றப் போதெல்லாம் மங்கி உள்ளத்தில் மறைந்து கிடந்த

நிரா விசனத்தைக் காட்டுவதாகவிருக்கும். தனது மகனுக்கு அறிவு புகட்டுவதில் தானாகவே ஒருவிதக் கவலையும் எடுத்துக்கொள்ளவில்லை. அருணாசலம் பழைய கொள்கைகளிலேயே வளர்ந்துவந்தான். பட்டை பட்டையாக விபூதி தரித்துக்கொள்வது, மற்ற கல்லூரி மாணவர்களைப் போலக் குடுமியைக் கத்தரித்துக்கொள்ளாமலிருப்பது முதலியவைகளெல்லாம் தனது கடவுள் பக்திக்கும் ஜாதி ஆசாரத்திற்கும் அறி குறி என்று அவன் கருதியிருந்தான்.

இம்மாதிரி மனப்பாங்குடைய அருணாசலத்தைச் சாரதாளின் கடிதம் கலக்கிவிட்டது. அவளுடைய அழகும், காதலும் அவனை ஒரு புறம் வலிமையாக இழுத்தன. சென்னையிலேயே சாரதாளிருந்து மதத்தைச் சேர்ந்தது தெரிந்திருந்தால் அவன் என்ன செய்திருப்பானோ யாரும் சொல்ல முடியாது. ஆனால் ஊருக்கு வந்தது முதல் பழங் கொள்கைகளே பலமாக வேரூன்ற ஆரம்பித்தன.

அன்று மத்தியானம் சாப்பிடுவதற்காகச் சமையற் கட்டிற்குச் சென்றான். சாதம் போட்டுவிட்டு நின்றுகொண்டிருந்த சமையற்காரி, "அருணா, சேட்டயா, நம்ம வீரச் சக்கிலி குடும்பத்தோடு போய் விட்டான், என்னமோ கிருஸ்துவேதமாமே அதிலே சேந்துக்கிட்டானும்" என்று சொன்னாள். அருணாசலத்திற்குச் சாரதாளின் நினைவு வந்தது. "சாரதாள் வீரச் சக்கிலி எல்லோரும் சமம். ஒரே அந்தஸ்து, ஒரே பந்தியில் சாப்பிடலாம்; இஸ்டப்பட்டால் கலி

யாணங்கூடச் செய்து கொள்ளலாம்" என்றிவ்வாறு அவன் மனதிற்குள்ளேயே நினைத்துக்கொண்டு மௌனமாய் இருந்ததைக் கண்ட சமையற்காரி கறுப்பியும் ஆரம்பித்தாள். 'செத்த மாட்டைத் தின்கிற இவனோடு எல்லாரும் ஒண்ணு. கலக்டர் துரைகூட அவனோடு ஒண்ணுச் சாப்பிடுவாராமே! நம்பளைக் கண்டால் அவன் கும்பிடமாட்டானாம். திண்ணையில் வந்து உட்கார்ந்துகொள்வானாம். உம், காலங் கெட்டுப் போச்சு.........'' அவள் மேலும் சொல்லிக்கொண்டே போனாள்.

அருணாசலத்திற்கு அவன் மனதில் நிகழும் போராட்டமே பெரியதாக இருந்தது. ஒன்றுமறியாத அந்த வேலைக்காரியின் வார்த்தைகள் கடைசியாகப் பழங்கொள்கைகளுக்கு வெற்றியளித்துவிட்டன. அன்றே அவன் சாரதாளுக்குத்தான் அவளைக் கலியாணம் செய்துகொள்ளமுடியாதென்று எழுதிவிட்டான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. ராமசாமிப் பிள்ளையின் உடல் நிலை மிகவும் கவலைக்கிடமாய்க்கொண்டே வந்தது. மூன்றும் நாள் சாரதாளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

''எனது ஆருயிர் அருணா,

என்னைக் கைவிட்டுவிடாதீர், காதலா காதலா, கைவிட்டு விடாதீர். காதலுக்கு ஜாதியென்றும், உயர்வு தாழ்வென்றும் உண்டா? இல்லவே இல்லை. நீங்கள் என்னைப் பார்த்தீர்கள், நான் உங்களைப்பார்த்

தேன். காதல் கொண்டோம். அங்கு ஜாதி எங்கு வந்தது?

அருணு, நமது காதலுக்கு அழிவில்லையென்றிருந்தேனே. எத்தனை தடவை அதன் உயர்வையும் வலிமையையும்பற்றிப் பேசி மகிழ்ந்திருக்கிறோம்! ஜாதியென்ற உலகம் நகைக்கும் அர்த்தமற்ற கட்டுப்பாட்டை வைத்துக்கொண்டு அதைத் தள்ளிவிட்டீர்களே. நான் கிருஸ்துவ மதத்தைப்பின்பற்றுகிறேனென்றால் அது என்னையும் எங்கும் நிறைந்து விளங்கும் இறைவனையும் பொருத்தது. மதம் ஆத்ம சம்பந்தமானதல்லவா? பின் அதை என் சமூக வாழ்க்கைக்குப் பேரிடைஞ்சலாகச் செய்யவேண்டும்? அருணு பழைய ஆபாசங்களுக்கு இடங்கொடுத்துவிடாதீர்.

அருணு. அன்பே, கைவிட்டு விடாதீர்.
காதல், காதல், காதல்.
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்'
தங்களையே எல்லாமென்றிருக்கும்
சாரதாள்''

காதற்பெருக்கால் வெளிவந்துள்ள இந்தக் கடிதம் அருணாசலத்தைக்கலங்கச்செய்தது. கொஞ்ச நேரம் அவனுக்குக் காதலைத் தவிர வேறு எவ்வித யோசனையுமில்லாத ஒரு இன்பகரமான உணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் அது நிலைபெற்று நிற்கவில்லை. சாரதாளுக்கு யாதொரு பதிலுமளிக்காமல் மறுபடியும்

தன் மனப்போராட்டத்திற் கிடங்கொடுக்கலானுன். காதல் சில சமயங்களில் வெற்றிகொள்ளும்; பழங் கொள்கைகள் சில சமயங்களில் வெற்றிகொள்ளும்.

இவ்வாறு ஐந்து நாட்கள் சென்றன. ராமசாமிப் பிள்ளேயின் தீராமனக்கவலே யெல்லாம் திர்ந்தது; அவர் உயிர் துறந்துவிட்டார். தான் எழுதிப் பத்திரமாகத் தன மைந்தனிடம் கொடுததுவிட்டார். சாகும்போது "ஆ, எனது அருமைக் கமலா இவ்வளவு நாட்கள் எனக்காகக் காத்திருந்தாய்; இதோ வந்துவிட்டேன்" இவைகள்தாம் அவர் கூறிய வார்த்தைகள்.

அருணசலத்திற்கு உண்டான துக்கத்திற்களவில்லே. தந்தையிறந்த பிறகு அவன் உலகத்தில் ஆதரவற்றவனுகப் போய்விட்டான். தந்தையை அவனிடமிருந்து பிரித்துவிட்ட கடவுளே நொந்துகொள்வான். தன்னேத் தண்டிக்கவே கடவுள் இவ்வாறு செய்திருப்பார் என்றும் நிஜனத்தான். ஜாதி சமயம் பாராமல் மணஞ்செய்துகொள்ள எத்தனித்த அவனேக் கடவுள் சரியானபடி தண்டித்துவிட்டார் என்று அவனுக்குப் பட்டது. இந்த எண்ணம் தந்தையின் பிணம் சுடுகாடு சென்ற பிறகு பலப்படலாயிற்று. அவனுக்கு வேறு ஒன்றும் தோன்றவில்லே. தாங்க முடியாத துக்கத்தால் மதி மயங்கிய அருணசலம் அன்றே சாரதாளேத் தான் இனி நினேக்கவும் முடியாது என்று அவளுக்கு எழுதியனுப்பிவிட்டான்,

மூன்றும் நாள் மறுபடியும் சாரதாளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அருணசலம் அசட்டையாக

அதை மேசைமேலெறிந்து விட்டுக் கன்னத்திற்குக் கைகொடுத்து உட்கார்ந்திருந்தான். உலகமே அவனுக்கு ஒரு பெரும் பாலைவனமாகத் தோன்றியது. என்னென்னமோ நினைவுகள் அவன் மனதிலோடின அப்பொழுதுதான் அவனுக்குத் தன் தந்தை கொடுத்த கடிதத்தின் நினைவு வந்தது. துக்கத்தில் அதை இதுவரை மறந்துவிட்டான். அதை எடுத்து வாசிக்கலானான்:-

"எனது அருமை அருணா,

நான் இறந்த பிறகாவது என் மனதில் புதைந்து கிடக்கும் இவ்விஷயங்கள் உனக்குத் தெரிய வேண்டுமென்று இதை எழுதிவைக்கிறேன்.

நான் எனது அருமை மனையாளுடன் வாழ்ந்த தெல்லாம் ஆறு மாதத்தில் கொடிய வைசூரிநோய் அவளைக்கொள்ளை கொண்டு போய்விட்டது. அவளைப் பிரிந்து எனக்கு இவ்வுலகில் ஒரு இன்பமும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால் எப்படியோ நான் உயிர் வாழ்ந்து வந்தேன், எனக்கு ஊரிலிருக்கப் பிடிக்கவில்லை. (அப்பொழுது நான் வசித்து வந்தது திருநெல்வேலியில்) எனது ஜீவனிருக்கும் வரையில் பிறர்க்குபகாரமாக இருக்கவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று ஆகையால் எனது ஆஸ்திகளையெல்லாம் விற்றுக்கிடைத்த ஒரு லக்ஷம் ரூபாயையும் பாங்கியில் போட்டுவிட்டு ஊர் ஊராக அலைந்து திரிந்தேன். இயற்கையைக் கண்டு களிப்பதில் எனக்குப் பிரியம் உண்டு. இயற்கை வனப்பு மிக்க இடங்களுக்

கெல்லாம் சென்றேன். இப்படிப்பல இடங்களில் சுற்றியதில் எனக்கு அர்த்தமற்ற கொள்கைகளிலி ருந்த மூடநம்பிக்கைகளெல்லாம் மறைந்துவிட்டன. நமது சமூகத்திலுள்ள பல ஊழல்கள் நன்கு புலப்பட் டன. ஆனால் எனது காலத்தைப் பிரிந்த பிறகு அவற்றைப் பிறருக்குக் கூறவோ அல்லது சமூக சீர்திருத்தத்திற்காகப் பாடுபடவோ எனக்கு விருப் பமேயில்லை. நாட்களை எப்படியாவது கழிக்கவேண் டுமென்பதொன்றே எனது எண்ணமாயிருந்தது.

ஒரு நாள் ஒரு தோட்டத்தின் வழியாகச் சென் றுகொண்டிருக்கும்பொழுது ஒரு சக்கிலியப்பெண் அங்கு வேலை செய்துகொண்டிருப்பதைக் கண்டேன். பக்கத்தில் மர நிழலில் ஒரு குழந்தை சிறு கந்தைத் துணியிற் படுத்திருந்தது. அந்தக் குழந்தை அழும் போதெல்லாம் அவள் அதற்குப் பாலூட்டி வரு வாள். பிறகு மறுபடியும் வேலைசெய்ய ஆரம்பிப் பாள். அவள் குழந்தைக்குப் பால் கொடுக்கும் போது அக்குழந்தையைத் தனக்கு அக் கஷ்ட நிலை யை அருளிய கடவுளை நொந்துகொண்டிருந்தாள். அவள் நிலைமை எனக்குப் பரிதாபகரமாக விருந்தது. எனக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. அவளுக்கு ஆயிரம் ரூபாய் கொடுப்பதாகக் கூறிப் பல வகைகளிலும் சமாதானஞ்சொல்லி அக்குழந்தை யை என்னிடம் கொடுத்துவிடும்படி செய்தேன். அவள் கணவன் கண்டிக்கு ஓடி விட்டானும்.மற்றப்படி

அவளுடைய பந்துக்கள் இதைத் தடுக்கவில்லை. அவள் குழந்தையைப் பிரிந்த காட்சி கல்லையுங் கரைக்கக் கூடியதாகவிருந்தது. "கண்ணே நீ படிச்சு மேலுக்கு வருவாயென்று கொடுக்கிறேன். பாவி மகன் எங்கிருந்தாலென்ன? சுகமா இருந்தாப்போதும்" என்று குழந்தையை முத்தமிட்டுக் கண்களில் நீர்வடிய என்னிடம் கொடுத்தாள். அப்பொழுது அக்குழந்தைக்குச் சுமார் எட்டு மாதமாயிருக்கும். நான் ஒரு தாயின் அன்போடு அதை வளர்த்தேன். அக் குழந்தைதான் நீ.

உன்னை வளர்த்துக் கல்வி கற்பித்து மேன்மையடையச் செய்யவேண்டுமென்ற எண்ணம் என்னை மறுபடியும் திருநெல்வேலிக்குப்போகச் செய்தது. அங்குள்ள என் பந்துக்கள் நான் ஊர், பேர் தெரியாத ஒரு குழந்தையை வளர்த்துவருவதைப்பற்றி ஆக்ஷேபம்செய்யலாயினர். அவர்களுக்குச் சமாதானங் கூறிக்கொண்டிருந்தால் உனக்குச் சரியான வயதும், அறிவும் வராதமுன்பே உனக்கிந்த ரகஸியத்தை வெளியிடவேண்டியது நேரிடுமென்று கருதி நான்பேசாமல் இந்தவூருக்கு வந்து நிம்மதியாகக் காலங்கழிக்கலானேன்.

நமது சமூகத்திலுள்ள ஊழல்களையெல்லாம் நீயே அறிந்துகொள்ளவேண்டுமென்பது என் விருப்பம். அதற்காகவே நான் உன்னைச் சென்னைக்கனுப்பினேன். கல்லூரிப் படிப்பில் நன்மையுண்டாகு

மென்றுநான் கருதவில்லை. ஆனால் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளவும் சமூக சீர்திருத்த இயக்கங்களைக் கவனிக்கவும் இடமுண்டல்லவா?

பிறகு நீ எப்பெண்மணியைக் காதல் கொண்டாலும் ஜாதிமத வேறுபாடுகளைக் கவனியாது மணந்து உலகில் பிறருக்கு ஒரு எடுத்துக்காட்டாக வாழ வேண்டுமென்பதே எனது பூரண விருப்பம்.

அருணா, பிறப்பைக் குறித்து நீ உன்னை இழிந்தவனென்று கருதுவாயானால் உன்னைப் போன்ற முட்டாள் உலகில் வேறு எவருமில்லை. உண்மையில் பிறப்பினால் உயர்வு தாழ்வு ஏற்படுவதேயில்லை. பழங் கொள்கைகளை இந்த விஷயத்தில் நம்பவேண்டாம். அவைகளெல்லாம் இந்த நூற்றாண்டுக்கு உதவா.

எனது செல்வமனைத்தையும் உனக்கே எழுதி வைத்திருக்கிறேன். நீ காதலிக்கும் பெண்ணையே மணந்து தாய்நாட்டுச் சேவை செய்து வாழ்வாயாக.

உனது,
ராமசாமிப் பிள்ளை,

படித்து முடித்தான். கையிலிருந்து அக்கடிதம் நழுவிக் கீழே விழுந்தது அந்தச் சமயத்தில் அவனது நிலைமை வார்த்தைக்கடங்காதபடியிருந்தது

சாரதாளின் கடிதத்தை ஆவலுடன் பிரித்து பார்த்தான். அது கீழ்க்கண்டவாறிருந்தது.

நீங்கள் கைவிட்ட பிறகு எனக்கு இவ்வுலகில் வேலையில்லை. தங்கள் வரவை எதிர்பார்த்து எந்த உலகில் இவ்விதக் கொடிய அர்த்தமற்ற பிரிவினைக ளெல்லாமில்லையோ அங்குவர ஆவலுடனிருப்பேன்.

தங்களைக் கடைசிவரையிலும்
மறவாத, தங்கள்,
சாரதாள்:




—

கவிக்குயில் நிலைய அடுத்த வெளியீடுகள்:

முத்துக் குவியல் (கவிதைகள்)
சிற்பத்தின் சக்தி (கதைகள்)
இன்ப வசந்தம் (கட்டுரைகள்)
தேனருவி (கவிதைகள்)

## அறிவிப்பு. KVC01 05

'தேவி' என்னும் மாதப் பத்திரிகைக்கும், 'தேவி நிலையம்' என்னும் எங்கள் புத்தகப் பதிப்பகத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாமலிருந்தபோதும், பெயர்க் காரணத்தால் குழப்பம் ஏற்படுவதால் 'தேவி நிலையம்' என்னும் எங்கள் நிலையப் பெயரை மாற்றி 'கவிக்குயில் நிலையம்' என்னும் பெயரை வைத்திருக்கிறோம். இனிக் கடிதப் போக்குவரவு செய்வோர் புது விலாசத்திற்குச் செய்யும்படியாகக் கேட்டுக்கொள்கிறோம்.

பதிப்பாசிரியர்:

**கவிக் குயில் நிலையம்,**

**கோட்டாறு** (தென் திருவிதாங்கூர்)

---